

# she is the bearer of tradition...

IN

## CENTURY SAREES

THE
**CENTURY**
SPG. & MFG. CO., LTD.
CENTURY BHAVAN,
WORLI, BOMBAY-25 DD.

*Century — For 100% cotton textiles*

# எந்நேரமும் நிர்லானுடன் இருப்பது யார்?




இணைபிரியா ஜோடி...ஆர்க்கே சில்க்
மில்ஸும், நிர்லானும். இசைவான
பல துணிரகங்களை உருவாக்கிக்
கொண்டே இருக்கும் ஜோடி...
புடவைகள், ஷர்ட்டிங்குகள்,
சூட்டிங்குகள் மற்றும் பலரகமான
இணைப்புத் துணிவகைகள்.
இணைப்பின் இனிய பயன்.

Interpub/NIR/18A TM

**சிறந்த மில்கள் உபயோகிப்பது நிர்லான் நூலிழை!**

**நிர்லான் சிந்தெடிக் ஃபைபர்ஸ் அண்ட் கெமிகல்ஸ் லிட்.**



# நன்றி உணர்வோடு...

## எமது வெள்ளி விழாவின்போது ஒளிமயமான எதிர்காலத்தை நோக்குகின்றோம்

திரு. N. கிருஷ்ணன் துவக்கி வைத்த அஸோஸியேடட் டிரேட்ஸ் சாதனைகள் நிறைந்த 25 ஆண்டுகள் முடித்து தனது வெள்ளி விழாவை 1971 ஆகஸ்டு 14ம் தேதி கொண்டாடியது.

கடந்த ஆண்டுகளில் இதன் வளர்ச்சிக்கு இந்திய, வெளிநாட்டு நண்பர்கள், வாடிக்கையாளர்களின் நம்பிக்கையும், ஆதரவுமே தூண்டுகோல்; சக ஊழியர்களின் கடின உழைப்பும், உளமார்ந்த சேவையுணர்ச்சியுமே உறுதுணை. இதன் பயனாகவே அஸோஸியேடட் டிரேட்ஸ் விரிவடைந்து வெளிநாட்டு விற்பனையைப் பெருக்க, தரமான பொருட்களை உற்பத்தி செய்ய பல நிறுவனங்களை நிறுவி பல தொழில்கள் நடத்தும் ஒரு மாபெரும் நிறுவனமாக வளர்ந்துள்ளது.

இந்த வளர்ச்சிக்கு ஒத்துழைத்த எல்லோரையும் நன்றியுடன் பாராட்டவும் அவர்களது தொடர்பில் பெருமிதப்படவும் நிறுவனம் கடமைப்பட்டுள்ளது. தொழில் வளர, அதை வளர்க்கும் சமூகத்திற்கும் நன்றியுடன் சேவை செய்ய வேண்டுமென்பதை உணர்ந்து இனிவரும் ஆண்டுகளிலும் இதே லட்சியத்தைக் கடைப்பிடிக்க அஸோஸியேடட் டிரேட்ஸ் உறுதி கொண்டுள்ளது.

இதே நன்றி உணர்வோடு வெள்ளி விழா கொண்டாடும் தருணத்தில் அஸோஸியேடட் டிரேட்ஸ் அதன் சக நிறுவனங்களான இன்டர் நேஷனல் பிரைவேட் லிமிடெட், என்கே அஸோஸியேட்ஸ் பிரைவேட் லிமிடெட், அவலான் ப்ராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெட், அவலான் இன்ஜினியர்ஸ், அவலான் ஃபாஸ்டனர்ஸ் பிரைவேட் லிமிடெட் ஆகியவை பக்கத்துக் கிராமங்களில் மருத்துவ வசதிக்காக ஓர் இலவச மருத்துவமனை அமைத்துக் கொடுப்பதை பெரும் பேருகக் கருதுகின்றன.

அஸோஸியேடட்
டிரேட்ஸ்
யூனிட்டி பில்டிங்ஸ் 2 வது மாடி
ஜெயசாமராஜேந்திரா ரோடு,
பெங்களூர்-2

அஸோஸியேடட் டிரேட்ஸின்  ஆண்டுகால சேவை

AT-6620

# கல்கி

## பொருளடக்கம்



விரோதிகிருது ஆவணி 6 — ஆகஸ்ட் 22, 1971



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 45-00 | ரூ. 22-50 |

தமிழ்த் திருநாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
--- பாரதியார்



மலர் 31 ★ இதழ் 4

22-8-1971

# ருஷியாவுடன் உடன்படிக்கை

அமெரிக்கா நமக்குச் சாதகமாக இல்லை. அதை நம்புவது வெள்ளத்தில் ஓர் உளுத்த கட்டையைப் பற்றிக் கொள்வது போலவே ஆகும். மறுபுறத்திலோ சீனத்தின் அபாயம் பயங்கரமாக வலுத்து வருகிறது. எனவே, ருஷியாவுடன் பாதுகாப்பு உடன்படிக்கை செய்து கொள்வது இந்தியாவுக்குத் தேவையாகி விட்டது. ஸோவியத் மந்திரி ஸ்ரீ குரோமிகோவுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தியதன் முடிவாக ஒரு விரிவான உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டுள்ளது. அரசியலிலும், சமூக அமைப்பிலும் மாறுபாடு கொண்ட நாடுகளும் சமாதானத்துடன் கூடி வாழ்ந்து ஒத்துழைக்க வேண்டும் என்ற கருத்தை இந்த உடன்படிக்கை வலியுறுத்துகிறது. கம்யூனிஸ ருஷியாவுக்கு ஓர் உபகிரகமாக இந்தியா ஆகவில்லை என்று இந்த ஷரத்து உறுதிப்படுத்துவதால் இது முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

உடன்படிக்கை செய்துகொண்டுள்ள இந்தியா, ருஷியா ஆகிய இரு நாடுகளில் ஏதாவதொன்றின் மீது மூன்றுவது நாடொன்று போர் தொடுத்தால், அதை எதிர்த்து உதவிபுரிவது இருவருடைய கடமையுமாகும் என்று இந்த ஒப்பந்தம் வற்புறுத்துகிறது. இவ்விரு தேசங்களில் ஏதாவதொன்றின் மீது வெளிநாடு படை எடுத்தாலோ, படை எடுக்கக்கூடிய அபாயம் ஏற்பட்டாலோ, அப்போது இரு நாடுகளும் கலந்தாலோசித்து, அவற்றின் சமாதானத்தையும் பாதுகாப்பையும் கருதிச் சக்தி வாய்ந்த முறையில், தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ளும் என்றும் உடன்படிக்கை கூறுகிறது.

இந்த உடன்படிக்கையைச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது என்று கூறுவது சரியே. யாஹ்யா கான் இதன் முக்கியத்துவத்தை உணராமலிருக்க முடியாது.

ஒரு நாடு தனது சொந்த மனப் போக்கை மட்டுமே சார்ந்து அந்நியக் கொள்கைகளை வகுத்துக் கொள்ள முடியாது. மற்ற நாடுகளின் போக்கையும் கவனித்தே பெரும்பாலும் அந்நியக் கொள்கையை வகுக்க வேண்டியதாகும். பாகிஸ்தானில் நடைபெறும் உள்நாட்டுப் போரின் விளைவுகளும், யாஹ்யா கான் பிடிவாதமாகப் பிடித்துக்கொண்டிருக்கும் கொள்கையும் ஸோவியத் ருஷியாவுடன் இந்தியா ஒரு பாதுகாப்பு உடன்படிக்கை செய்து கொள்வதை அத்தியாவசிய மாக்கியுள்ளன. தில்லியில் ஆகஸ்டு 9ந் தேதியன்று முடிவு செய்யப்பட்ட இந்த உடன்படிக்கை விரைவில் மாஸ்கோவிலும் ஊர்ஜித மாக்கப்பட்டது.

'யாருடனும் கூட்டுச் சேரமாட்டோம்' என்ற அடிப்படையில் இந்தியா இதுகாறும் பின்பற்றி வந்த தடஸ்தக் கொள்கை அறுபட்டுவிட்டது. அதற்குச் சமாதி கட்டியாகி விட்டது.

இந்தியாவும் ருஷியாவும் செய்து கொண்டுள்ள உடன்படிக்கையின் வழியிலேயே பிரிட்டனும் செல்லுமாகில் அது திருப்திக்கும், மகிழ்ச்சிக்கும் உரியதாகும். பிரிட்டனை இந்த நல்ல திசையில் செலுத்துகிற சக்திகள் அந்நாட்டில் ஓரளவு வலுவடைந்து வருகின்றன.

நான் விரும்பியது போலவும், எதிர்பார்த்தது போலவும் ருஷிய சர்க்கார் விரைவுடன் நடவடிக்கை எடுத்து இந்திய - சோவியத் உடன்படிக்கையைத் தோற்றுவித்து விட்டது. இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே போர் ஏற்பட்டால் இரு நாடுகளுக்கும் ஏற்படக் கூடிய விபரீதங்களைப் பொருட்படுத்தாமல் யாஹ்யாகான் யுத்தத்தைத் தூண்டி விடுவதற்கு யத்தனிப்பதை இந்த நடவடிக்கை தடுத்து நிறுத்தும்.

இந்திய - ஸோவியத் உடன்படிக்கையைப் பொதுவாக நம் நாடு முழுவதுமே வரவேற்பதிலிருந்து, இன்றைய அமெரிக்க அரசாங்கத்திடம் இந்தியா எவ்வளவு தூரம் நம்பிக்கை இழந்துவிட்டது என்று மதிப்பிடலாம். இப்போதும்கூட

ருஷியாவைப் போலவே அமெரிக்காவும் இந்தியாவுடன் உடன்படிக்கை செய்து கொள்வதற்குத் தடை ஏதும் இல்லை. கம்யூனிஸ்ட் சீனவுடன் அமெரிக்கா புது நட்பு கொள்வதற்குக் காரணம், அமெரிக்கப் பண்டங்களைச் சீனத்தில் விற்பனை செய்வதற்காகத்தான். அமெரிக்காவும் இந்தியாவும் உடன்பாடு செய்து கொள்வதற்கு இந்திய — ஸோவியத் உடன்படிக்கை எவ்விதத்திலும் தடையாகாது. ஆனல் அவ்வித உடன்படிக்கை ஏற்பட்டால் இந்தியாவுக்கு விரோதமாகப் பாகிஸ்தானுக்கு ராணுவ உதவி அளிப்பதை அமெரிக்கா நிறுத்த வேண்டியதாகும்.

**[ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது]**

22-8-1971

# ராஜாஜியின் கருத்துக்கள்

## அவர்களுக்கே அவமானம் !

சென்னை மாநகராட்சி மன்றத்தில் ஆகஸ்ட் 10ந் தேதி நடந்த அமளியிலிருந்து, இருபது ஆண்டுகளுக்கு மேல் மூடிக் கிடந்த கள்ளுக்கடைகளை மீண்டும் திறப்பது குறித்து விவாதம் நடத்த தி. மு. க. வெட்கப்படுகிறது எனத் தெளிவாகிறது. மதுவிலக்கை ரத்தாக்குவது குறித்து அவமான உணர்ச்சி ஏற்பட்டது நல்ல அறிகுறி. சென்னை மாநகராட்சியில் தி. மு. கழகத்துக்குப் பெரும்பான்மை பலம் உள்ளது. எனவே மதுவிலக்கை ரத்து செய்யாமல் நீடிக்க வேண்டும் என்கிற எதிர்க் கட்சி மசோதாவுக்குத் தி. மு. க. தோல்வி தரமுடியும். இவ்வாறிருந்தும், இவ்விஷயத்தில் தி. மு. க. மனக் கலக்கம் அடைந்து, எவ்விதத்திலேனும் விவாதம் நடப்பதைத் தவிர்க்கப் பார்த்திருக்கிறது. ஒழுங்கீனத்தையும் வன்முறையையும் மேற்கொண்டு விவாதத்தைத் தடுத்திருக்கிறார்கள்!

## அவசரப் பிரகடனம் கூடாது

மதுவிலக்கை ரத்து செய்வதில் சட்டப்படி இடைஞ்சல்கள் இருப்பதால், தமிழ் நாட்டு முதல் மந்திரி திரு கருணாநிதி ஓர் அவசரப் பிரகடனம் வெளியிடச் செய்து அதன் மூலம் தம் உத்தேசத்தை நிறைவேற்றிக்கொள்வார் என எதிர்பார்க்கப்படுகிறது. அவசரப் பிரகடனம் என்பது பயங்கரமான நெருக்கடிகளைச் சமாளிப்பதற்கெனவே ஏற்பட்டது. இந்த அதிகாரத்தைக் கொண்டு, சுதந்திரக் கொண்டாட்ட வாரத்திலே கள்ளுக் கடைகளைத் திறக்க முற்பட்டால் அது மகத்தான வெட்கக்கேடாகும். நமது சுதந்திரத்தின் வெள்ளி விழாவைக் கொண்டாடுவதற்கு இதல்ல வழி.

## கள்ளும் காச நோயும்

மதுபானம் காச நோயைக் குணப்படுத்துவதற்கு உதவும் என்று தமிழக சுகாதார மந்திரி கூறியிருப்பதை அடியோடு மறுத்து முன்னுன் புதுதில்லி காச வைத்தியசாலை சூப்பிரண்டெண்ட் டாக்டர் ஆர். கிருஷ்ண ''ஹிந்து''ப் பத்திரிகையில் எழுதுவதாவது:

நான் ஒரு காச நோய் வைத்திய நிபுணன்; காச நோயாளிகளைக் குணப்படுத்துவதிலேயே வாழ்நாளைச் செலவிட்டவன். தமிழக சுகாதார மந்திரியின் கூற்று மிக மிக



இருபதாண்டுகளுக்குப் பிறகு

மது

விந்தையாகவும், அநாவசியமாகவும், மருத்துவ சாஸ்திரத்துக்கு விரோதமாகவும் உள்ளது எனக் கூற முற்படுகிறேன். காச நோய் சிகித்சையில் போதையூட்டும்பானங்களுக்குச் சிறிதும் இடமில்லை என்று அதிகார 'பூர்வமாகக் கூறுகிறேன். மாறாக, காச நோயாளிகளில் பலர் மதுவுக்காகச் செலவிடுவதை மருந்துக்காகவும், நல்ல உணவுக்காகவும் செலவிட்டால் வியாதி குணமாவதில் பலன் காணலாம்.

## சந்திரனைச் சூறையாடுதல்

சந்திரனின் தூய்மையைக் குலைத்துச் சூறையாடுகிற காரியம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. செய்திப் பத்திரிகைகளில் சந்திரலோகப் பயணம் பற்றிப் படிப்பவர்கள் யாவரும் இதைப் பாராட்டிப் புகழ்ந்து வருகிறார்கள்!

'விஞ்ஞான ஆராய்ச்சி' என்கிற அளவில் மட்டும் பார்த்தால் இந்தப் பயணங்களைப் பெரிதுபடுத்திப் புகழ இடமுண்டு. இதில் காட்டப்படும் சாகஸ உணர்ச்சியையும் கௌரவித்தல் தகும். இப்படியிருந்தும்கூட, குறிப்பாக எவ்வித நோக்கமும் இல்லாமல் அழகிய சந்திரனை இவ்வாறு தாக்கி வருவதை என்னால் ரசிக்க முடியவில்லை. சந்திரனிலிருந்து டன் கணக்கில் கற்களைக் கொண்டு வருவதால் பெரிய எதிர் விளைவுகள் ஏற்படக் கூடும்.

பணத்துக்கு எத்தனையோ உபயோகம் உள்ளது. மக்களுக்கு அவசியமானதும், உடனுக்குடன் நன்மை பயப்பதுமான பொதுநலத் திட்டம் எதுவுமே இல்லாதது போல், ஏராளமான பணத்தைச் சந்திர லோக சஞ்சாரங்களில் செலவிடுகிறார்கள்.

## பகிரங்க விசாரணை வேண்டும்.

தமிழக முதன் மந்திரி டாக்டர் பட்டம் பெற்றதை யடுத்து அண்ணாமலை சர்வகலா சாலையில் ஏற்பட்ட சம்பவங்கள் குறித்து ஹைகோர்ட் நீதிபதி ஒருவரைக் கொண்டு விசாரணை நடத்த அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது; நல்ல முடிவு.

ஆனால் துரதிருஷ்ட வசமாக, நீதிபதி நியமனத்தில் தற்போதுள்ள நடைமுறை காரணமாக, முதன் மந்திரிகள் தொடர்பு கொண்டுள்ள வழக்குகளில் அந்தந்த ராஜ்ய ஹைகோர்ட்டுகள் மக்களின் நம்பிக்கையை இழந்துள்ளன. இதனால்தான் அண்ணாமலை சர்வ கலாசாலை மாணவர்கள் வெளி ராஜ்ய ஹைகோர்ட் நீதிபதியைக் கொண்டு விசாரிக்க வேண்டும் என விரும்புகின்றனர். அதெப்படியாயினும் விசாரணை பகிரங்கமாக நடக்க வேண்டும். இரகசியத்தில் நடத்தி முடித்து விடக் கூடாது. சாட்சிகள் யார், அவர்கள் பிரமாணத்தின் பேரில் கூறுவது என்ன என்று பொதுமக்கள்அறிய வேண்டும்.

## டாடாவின் எச்சரிக்கை!

உருக்குத் தொழிலதிபர் ஸ்ரீ ஜே. ஆர். டி. டாடா பாரத சர்க்காரின் தொழிற் கொள்கையை வன்மையாகக் கண்டித்திருக்கிறார். பொருளாதாரத் துறையில் யதேச்சாதிகாரத்தை நோக்கி நமது நாட்டை வேகமாகச் செலுத்திக் கொண்டே, அதற்கு மாறுபட்ட கருத்துக்களைப் பிரதமரும் மற்ற மந்திரிகளும் கூறி வருகிறார்கள் என்பதை டாடா எடுத்துக் காட்டியிருக்கிறார். பிரதமரின் கொள்கை பொருளாதார அபிவிருத்திக்குச் சிறிதும் உதவாது என்று உறுதியாகக் கூறுகிறார் ஸ்ரீ டாடா. ''வரட்டுச் சித்தாந்தத்தின்

## பம்பாயில் திருப்பதி !

ராமன் இருக்குமிடம் அயோத்தி எனில், வேங்கடேசப் பெருமான் இருக்குமிடங்கள் யாவும் திருப்பதிதானே? வேங்கடேசப் பெருமான் திருக்கோயில் கொண்டுள்ள திருப்பதி யொன்று பம்பாய் மாநகரத்தில் உள்ளது. சுமார் ஐம்பதாண்டுகளுக்கு முன் பிரதிவாதி பயங்கரம் அனந்தாசாரிய ஸ்வாமிகள், பம்பாய் ஃபனஸ்வாடியில் இந்த வேங்கடேச தேவஸ்தானத்தை ஏற்படுத்திய நாளாக, பெருமாள் பம்பாய்வாசிகளை ஆகர்ஷித்துத் தம் அருள் வண்ணத்தால் பாலித்து வருகிறார்.

பம்பாய் பக்தர்களின் — குறிப்பாகத் தமிழர்களின் — உற்சாகமே உற்சாகம்! ஃபனஸ்வாடி வேங்கடேசப் பெருமானுக்குத் தென்னாட்டு மரபுப்படி ஓர் அற்புத மரத்தேர் நிறுவி, பம்பாய் வீதிகளில் ரதோத்சவம் நடத்த உத்தேசித்திருக்கிறார்கள். பெருமானுக்குப் பல திருவாபரணங்களைச் செய்து சமர்ப்பிக்கவும் திட்டமிட்டிருக்கிறார்கள். பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ காதி கிருஷ்ணமாசாரிய ஸ்வாமியின் தலைமையில் பிரபல தொழிலதிபர் ஸ்ரீ ஜி. டி. ஸோமானி, மகாராஷ்டிர சபாநாயகர் ஸ்ரீ பார்டே ஆகியோரைக் கொண்ட 'திருத்தேர் — திருவாபரணக் குழு'வும் அமைக்கப்பட்டிருக்கிறது. திருமிகுந்த பம்பாயில் திருமகள் கேள்வனுடைய இத்திருப்பணிக்குத் திரவிய சகாயம் அனுப்ப வேண்டிய முகவரி:

Shri Venkatesa Bhagvan Ratha and Thiruvabharana Kainkarya Committee, Shri Venkatesa Devasthanam Trust, Fanaswadi, Bombay.

பொருட்டு, உற்பத்தி உயர்வுக்கான நல்ல வாய்ப்புக்களை வேண்டுமென்றே கைவிடுவது நம் நாட்டில் நல்வாழ்வுக்காக ஏங்கும் கோடாநு கோடி ஏழை மக்களுக்கு இழைக்கும் கொடூரமான அநீதியாகும். ஏற்கனவே நாம் பின்தங்கி விட்டோம். இன்னமும் வியர்த்தமான விவாதங்களிலும், அவற்றின் விளைவாக ஏற்படும் கால தாமதத்திலும் நாம் ஈடுபடுவது சற்றும் உதவாது'' என்கிறார் ஸ்ரீ டாடா.

### பி. ஸி. ஜி. படுதோல்வி

"இந்தியாவில் பி. ஸி. ஜி. — ஒரு படுதோல்வி'' என்ற சிறு நூலை எழுதியுள்ள டாக்டர் பி. வி. சர்வாதிகாரி எனக்குப் பின்வருமாறு எழுதியுள்ளார் :

> ஒரு காலத்தில் இந்தியாவில் பெருவாரி மக்களுக்கு பி. ஸி. ஜி. ஊசி குத்துவதைப் பிடிவாதமாக ஆதரித்தவன் நான். இன்று அதை அடியோடு ஆட்சேபிக்கிறேன். பி.ஸி.ஜி. ஊசி குத்துவது இந்தியாவில் பரிதாபத் தோல்வி அடைந்ததைக் காச நோய்க் கட்டுப்பாட்டுக்குத் தலைமை தாங்கும் சிலரேனும் உணர்ந்திருக்க வேண்டும். ஆயினும், உலக ஸ்தாபனங்களின் ஆதரவில் இந்த ஊசி குத்தும் திட்டம் நடைபெறுவதால் தோல்வியை வெளிப்பட ஒப்புக் கொள்ள இவர்கள் தயங்குகிறார்கள்.

# மகாவித்வான் மறைவு

ஏழு தலைமுறைகளாகக் கல்விச் செல்வத்தைக் குறைவறப் பெற்ற குடும்பத்தில் பிறந்தவர் காரப்பங்காடு வேங்கடாசாரிய ஸ்வாமி. இள வயதிலேயே காரப்பங்காடு சிங்கப்பெருமாள்ஸ்வாமியிடம்சம்பிரதாயவித்தையைப்பயிலத் தொடங்கி, தமது மேதா விலாசத்தால் சிறப்புடன் தேர்ச்சிபெற்றார். தர்க்க சாஸ்திரத்தில் புலமை பெற்றார். விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் ஆழ்ந்த, அகன்ற அறிவைப் பெற்றார். இதிஹாச, புராணங்களையும் கீதை முதலிய தத்துவ நூல்களையும் ஜனரஞ்சகமாகவும், அதேபோதில் கௌரவமாகவும் விரித்துரைக்கும் திறனைப் பெற்றார். தமிழ், வடமொழி இரண்டிலும் புலமை பெற்ற இந்த 'உபய



வேதாந்தி', அண்ணாமலை சர்வ கலாசாலையிலும், ஸ்ரீபெரும்பூதூர் சம்ஸ்கிருத பாடசாலையிலும் ஆசிரியர் பதவியைச் சிறப்புற ஆற்றியிருக்கிறார். சுமார் இருபத்தைந்து ஆண்டுகளாகச் சென்னையை இருப்பிடமாகக் கொண்டு இதிஹாச புராணங்களையும் விசிஷ்டாத்வைதத்தையும் தம் உபந்யாசங்களால் பிரசாரம் செய்துவந்தார். காலக்ஷேபத் துறையில் தகுந்த சிஷ்யர்களையும் பயிற்றுவித்துச் சமய மறுமலர்ச்சிக்கு அரும் பணி ஆற்றியிருக்கிறார்.

புலமையிலும் பண்பிலும் பக்தியிலும் பெரியவரான காரப்பங்காடு வேங்கடாசாரிய ஸ்வாமியின் மறைவில் சநாதன தர்ம சிம்ம மொன்றை இழந்து விட்டோம்.

# மகுடபதி

## அமரர் கல்கி



### அத்தியாயம் 20

### கல் விழுந்தது!

இத்தனை காலமும் நமது கதாநாயகி செந்திருவை அந்தரத்திலேயே நிறுத்திவைத்து விட்டேன். அவளைப் பற்றி ஒன்றும் சொல்லாததனால் வாசகர்கள் பலர் பெரிதும் கவலையடைந்திருப்பார்கள். என்மேல் கோபங்கூட அவர்களுக்கு வந்திருக்கும். செந்திரு மகுடபதியின் உள்ளத்தை மட்டுந்தானா கவர்ந்தாள்? ஆயிரக்கணக்கான நேயர்களின் அன்பையும் அனுதாபத்தையும் அல்லவா கவர்ந்திருக்கிறாள்?

ஆனாலும் இந்தக் கதையில் — தயவு செய்து இது கதைதான் என்பதை மறந்துவிட வேண்டாம் — பல சம்பவங்கள் ஏககாலத்தில் வெவ்வேறு இடங்களில் நடப்பதால், ஒவ்வொன்றாகத்தான் சொல்ல வேண்டியிருக்கிறது. அப்படிச் சொல்லும் போது, பாவம், அந்த அனாதைப் பெண்ணின் துயரத்தைக், கடைசியில் வைத்துக் கொள்ளலாமே என்று தள்ளிப் போடத் தோன்றுகிறது.

கவுண்டர்கள் இருவரும் செந்திருவைத் தேவகிரி எஸ்டேட் பங்களாவில் கொண்டு வந்து விட்டுப் போனதையும், செந்திரு தன்னை அடைத்திருந்த அறையின் கதவைப் படீர் படீர் என்று அடித்ததையும் பதினோராம் அத்தியாயத்தில் பார்த்தோம். கதவை அடிப்பதனால் கை நோவதைத் தவிர வேறு பலனில்லை என்று அவள் கண்டபோது, திரும்பிச் சென்று அந்த அறையில் கிடந்த கட்டிலில் குப்புறப் படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதாள். கண்ணீர் ஆறாய்ப் பெருக்கி வெகு நேரம் அழுது கொண்டேயிருந்தாள். அழுகையின் போது எப்படியோ வெறி சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டு வந்தது. மனத்தில் ஒருவித அமைதி உண்டாயிற்று. அப்படியே நித்திரையில் ஆழ்ந்தாள்.

''அம்மா! அம்மா!'' என்ற மிருதுவான குரலைக் கேட்டுச் செந்திரு கண் விழித்தபோது பத்து மணிக்கு மேல் இருக்கும். அவளை எழுப்பியவள் பங்களாவின் வேலைக்காரி பவளாயி. அறிவு தெளிந்த போது, செந்திரு, தான் ரொம்பவும் பலவீனமாயிருப்பதை உணர்ந்தாள். முதல் நாள் இரவு ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்த பயங்கரச் சம்பவங்களினாலும், அவற்றினால் உள்ளத்தில் ஏற்பட்ட பீதி, கோபம், துன்பம் முதலிய கிளர்ச்சிகளினாலும், போதிய உணவும் உறக்கமும் இல்லாத படியாலும், அவள் தேகம் மிகவும் சோர்வு அடைந்திருந்தது: உள்ளமும் களைப்படைந் திருந்தது; அவளுடைய திக்கற்ற நிலைமையை உள்ளபடி உணர்ந்து துக்கப்படுவதற்கு வேண்டிய சக்திகூட அவளுக்கு அச்சமயம் இல்லாமல் இருந்தது. அவளுடைய தேகமும் மனமும் அவ்வளவு பலவீனப்பட்டிருந்ததன் காரணமாக, அச்சமயம் யார் என்ன சொன்னாலும் கேட்கக்கூடிய நிலைமையில் அவள் இருந்தாள். வேலைக்காரி சொன்னபடி எழுந்திருந்து பல் துலக்கி முகம் கழுவினாள். அவள் கொண்டு வந்திருந்த ஆப்பத்தையும் காப்பியையும் சாப்பிட்டாள்.

பவளாயி பாத்திரங்களை எடுத்துப் போன பிறகு அறையின் கதவு திறந்திருப்பதைச் செந்திரு கவனித்தாள். மெதுவாக எழுந்து வெளியே வந்தாள். ஒருவரும் அவளைத் தடை செய்யவில்லை. ஹாலைக் கடந்து பங்களாவின் வாசற்புறம் வந்து பார்த்தாள்; பார்த்துக் கொண்டே நின்றாள். சிறிது சிறிதாக அவளுடைய உடம்பில் ஜீவ சக்தி உண்டாகி வந்தது. உள்ளமும் வேலை செய்ய ஆரம்பித்தது. ஒரு புறத்தில் அவள் கண் முன் தோன்றிய அழகிய அற்புதமான இயற்கைக் காட்சி அவளை வசீகரித்தது. ''ஆகா! என்ன அழகான

இடம்!'' என்று மனம் வியந்தது. மற்றொரு புறத்தில், அந்த அழகான இடத்தில் தான் சிறைப்பட்டிருப்பதும், அங்கிருந்து ஒரு வேலை கார்க்கோடக் கவுண்டரின் மனைவியாகத்தான் வெளியே போகக்கூடுமென்பதும் நினைவு வந்தன; அப்போது அவளுடைய நெஞ்சை யாரோ முறித்துப் பிழிவது போல் இருந்தது.

பங்களாவின் முன் வாசல் தோட்டத்தில் அங்குமிங்கும் உலாவினாள். அவ்விடத்திலிருந்து தப்பிச் செல்வதற்கு ஏதேனும் ஒரு வழி உண்டா என்னும் எண்ணம் அவள் மனத்தில் அடிக்கடி உதயமாயிற்று. சுற்றுமுற்றும் பார்க்கப் பார்க்க, அது எவ்வளவு அசாத்தியமான காரியம் என்பதுதான் நிச்சயமாய்த் தெரிந்தது.

பங்களாவுக்கும் தோட்டத்துக்கும் இடது புறத்தில் சரிவாக மலை உயர்ந்திருந்தது. அந்தச் சரிவில் கண்ணுக் கெட்டிய தூரத்துக்கு யுகலிப்டஸ் மரங்கள் வானளாவி உயர்ந்திருந்தன. பங்களாவுக்குப் பின் பக்கத்தில் மலை சுவரைப்போல் உயர்ந்திருந்தது. வலதுபுறத்தில் திடீரென்று செங்குத்தான பள்ளமாயிருந்தது. அதன் ஓரத்தில் இரும்பு வேலி எடுத்திருந்தது. வேலி வழியாக எட்டிப் பார்த்தால், சுமார் நாலு ஆள் உயரத்துக்குக் கீழே ஒரு பாதை போவது தெரிந்தது. அப்பாதை வளைந்து வளைந்து குறுக்கும் நெடுக்குமாய்ச் சென்று, வெகுதூரத்துக்கப்பால் தெரிந்த பெரிய மலைச் சாலையை அடைந்தது.

பங்களாவுக்கு எதிரே பலமான இரும்புக் கேட் போட்டிருந்தது. அதன் வழியாகத்தான் அந்தப் பங்களாவிலிருந்து வெளியே போகலாம். அப்படிப் போகும் பாதைதான் சிறிது தூரத்தில் மடங்கி, பங்களாவின் வலது புறமாகக் கீழே இறங்கிப் போயிற்று.

செந்திருவுக்கு நீலகிரி புதியதல்ல. ஏற்கனவே அவளுடைய தகப்பனார் இருந்த காலத்தில் கூனூரில் அவள் கோடை வாசம் செய்ததுண்டு. ஆகவே, சுற்றுமுற்றும் பார்த்த பின்னர், இந்தப் பங்களாச் சிறையிலிருந்து பிறருடைய ஒத்தாசையில்லாமல் தப்பிச் செல்வது இயலாத காரியம் என்பதைத் தெரிந்து கொண்டாள். ஆனால் அத்தகைய ஒத்தாசை தனக்கு எப்படிக் கிடைக்கும்? இந்தத் தனிமையான மலை உச்சிக்குத் தன்னைத்



தேடிக் கொண்டு யார் வரப் போகிறார்கள்? தன்பேரில் உண்மையாகப் பிரியம் கொண்டிருந்த இருவரில் ஒருவர் கார்க்கோடக் கவுண்டரின் கத்திக்கு இரையானார். இன்னொருவர் மேல் பாவிகள் கொலைக் குற்றம் சுமத்தப் போகிறார்கள்! ஆகவே தான் விடுதலையாகிச் சென்று அவரைக் காப்பாற்றினால்தான் உண்டு. அவர் வந்து தன்னைக் காப்பாற்றப் போகிறதில்லை. பின் யார் தனக்கு ஒத்தாசை செய்யப் போகிறார்கள்? — ஐயோ! மூன்று வருஷங்கள் சித்தப்பாவின் வீட்டில் சிறை இருந்த பிறகு, தப்பித்துச் செல்ல முயன்றதன் பலன் இதுதானா? அதைவிடக் கடுமையான மலைச் சிறைக்கு அல்லவா வந்து சேர்ந்து விட்டோம்? — என்று எண்ணிச் செந்திரு விம்மினாள். இதிலிருந்து தப்புவதற்கு வழி கிடையாதா? — தன்னிடம் அன்புடன் பேசிய வேலைக்காரி பவளாயியின் ஞாபகம் வந்ததும், கொஞ்சம் நம்பிக்கை பிறந்தது. 'பெண் என்றால் பேயும் இரங்கும்' என்று பழமொழி ஆயிற்றே? ஒரு பெண்ணுக்கு இன்னொரு பெண் இரங்க மாட்டாளா?

இந்த எண்ணத்துடன் செந்திரு வேலைக்காரியுடன் சிநேகம் செய்து கொள்ளத் தொடங்கினாள். பவளாயியும் செந்திருவிடம் அன்பும், அனுதாபமுமாய்ப் பேசினாள். செந்திரு, தன்னுடைய மனத்தைத் திறந்த



போது, பவளாயி அவளுக்காகக் கசிந்துருகுவதாகக் காட்டிக் கொண்டாள். ''ஆனால், நான் என்ன செய்வேன், தாயே! இந்தப் பங்களாவை விட்டு அந்தண்டை இந்தண்டை நான் போகக் கூடாது. உனக்கு மட்டுமா, எனக்குங்கூட இது ஜெயில்தான். என் புருஷனே ரொம்ப முரடு. ஏதாவது சந்தேகம் தட்டினால் என்னைக் கத்தியால் குத்திவிடுவான்!'' என்றாள்.

பவளாயி தன் புருஷனைப் பற்றிச் சொன்னது என்னமோ ரொம்ப சரிதான். அவனுடைய முகத்தைப் பார்க்கவே பயங்கரமாயிருந்தது. செந்திருவிடம் அவன் ஒரு வார்த்தை பேசவுமில்லை; செந்திரு பேசினால் அவன் காது கொடுத்துக் கேட்பானென்றும் தோன்றவில்லை. அவன்பாட்டுக்கு அவன் காரியத்தைச் செய்து கொண்டிருந்தான். பங்களாவுக்கு உள்ளே இருக்கும் போது அவன் தோட்டத்தின் இரும்புக் கேட்டைப் பூட்டிச் சாவியைப் பத்திரமாக மடியில் வைத்திருந்தான். வெளியே போகும்போதும் கேட்டைப் பூட்டிச் சாவியை எடுத்துக் கொண்டு போனான்.

மூன்று தினங்கள் கழித்து, ஒரு நாள் இரண்டு கவுண்டர்களும் வந்தார்கள். செந்திரு அவர்களுடைய காலில் விழுந்து தன்னுடைய சொத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு, தன்னை விட்டு விடும்படி கேட்டுக் கொண்டாள். இதனால் அவர்களுடைய கோபந்தான் அதிகமாயிற்று. கல்யாணத் தேதி குறிப்பிட்டாகி விட்டதென்றும், அவள் நல்ல படியாய்ச் சம்மதிக்கா விட்டால் பலவந்தமாகக் கல்யாணம் நடத்தப் படுமென்றும் தெரியப்படுத்தினார்கள். அதோடு, அடுத்த தடவை தாங்கள் வரும் போது அவளே இஷ்டப்பட்டுக் கார்க்கோடக் கவுண்டரைக் கல்யாணம் செய்து கொள்வதாக ஒரு காகிதத்தில் எழுதிக் கையெழுத்துப் போட்டுத் தரவேண்டுமென்றும் கூறி விட்டுப் போனார்கள்.

செந்திருவுக்குப் பிராணனை விட்டு விடலாமா என்ற எண்ணம் அடிக்கடி உதித்தது. ஆனால் மருடபதியின் மீது கொலைக் குற்றம் சாத்தியிருக்கிறார்கள் என்பது நினைவு வந்த போது, அவள் சாக விரும்பவில்லை. தனக்காக இந்தப் பெரிய கஷ்டத்துக்குள்ளானவரை, எப்படியாவது காப்பாற்ற வேண்டும்; அதற்காகத் தான் உயிரோடிருக்கவேண்டியது அவசியம். ஆனால், கார்க்கோடக் கவுண்டரைக் கல்யாணம் செய்து கொள்வது கனவிலும் நினைக்க முடியாத காரியம். கல்யாணத்தை எப்படித் தடை செய்வது? இம்மாதிரி யோசித்து யோசித்துக் கடைசியில் பங்கஜம் ஊகித்தவண்ணமே தனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாக நடிப்பது என்ற முடிவுக்கு வந்தாள். வேலைக்காரப் பவளாயியிடம் இதைச் சொல்லி, தனக்கு உண்மையில் பைத்தியந்தான் என்று மற்றவர்கள் நினைக்கும்படி செய்வதற்கு உதவி புரிய வேண்டும் என்றும், அவளுடைய புருஷன் குப்பண்ணக் கவுண்டனிடம்கூட இரகசியத்தைச் சொல்லக் கூடாதென்றும் கேட்டுக் கொண்டாள். பவளாயியும் அதற்குச் சம்மதித்தாள். ஆனால், இவர்களுடைய பேச்சைக் குப்பண்ணக் கவுண்டன் ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த விவரம் செந்திருக்காவது பவளாயிக்காவது தெரியாது.

கார்க்கோடக் கவுண்டரிடம் மேற்படி சூழ்ச்சியைக், குப்பண்ணக் கவுண்டன் தெரியப்படுத்திய போது, அவருடைய முகத்தில் புன்னகை தாண்டவமாடியது.

மாஜி ஸப் — ஜட்ஜ் அய்யாசாமி முதலியாரும், டிபுடி ஸுபரின்டெண்ட் சங்கநாதம் பிள்ளையும் செந்திரு விஷயமாகப் புலன் விசாரிக்கிறார்களென்று கார்க்கோடக் கவுண்டருக்குத் தெரிந்திருந்தது. அவர்களைச் சரிப்படுத்துவதற்குச் செந்திருவின் நடிப்புப் பைத்தியம் உபயோகமாயிருக்குமென்று அவர் கருதினார். அவ்விதமே அவர் உபயோகித்து வெற்றியடைந்தார் என்பதை முன்னொரு அத்தியாயத்தில் பார்த்தோம்.

மேற்படி பிரமுகர்கள் தேவகிரிக்கு வந்த அன்று காலையில் வேலைக்காரி பவளாயி செந்திருவிடம் வந்து, ''அம்மா! என்னத்தைச் சொல்ல? இன்றைக்குக் கல்யாணம் நிச்சயம் செய்வதற்காக யாரோ வரப் போகிறார்களாம்'' என்று தெரிவித்தாள். செந்திருவுக்குப் பகீர் என்றது. வழக்கத்தைவிட அதிகமாகப் பைத்திய நடிப்பு நடிப்பதென்று அவள் தீர்மானித்தாள். மத்தியானம் அவள் அறைக்குள் போன சமயம் பார்த்துக் குப்பண்ணக் கவுண்டன் அறைக் கதவைச் சாத்தி வெளிப்புறம் தாளிட்டதுடன், பவளாயிக்கு, ''கதவைத் திறக்காதே!'' என்றும் உத்தரவு போட்டுவிட்டான்.

அந்தச் சமயத்திலேதான் அய்யாசாமி முதலியாரும் சங்கநாதம்பிள்ளையும் கவுண்டர்களுடன் வந்தார்கள். வந்து பார்த்து — இல்லை, பார்க்காமலே பரிதாபப்பட்டு விட்டுப் போய்ச் சேர்ந்தார்கள். அவர்கள் திரும்பிப் போக,

மோட்டார் ஏறும் சமயத்தில் பேசிக் கொண்டிருந்ததைப் பவளாயி வந்து தெரிவித்தபோது, செந்திரு, ''ஐயையோ! இது என்ன விபரீதம்?'' என்று அரண்டு போனாள். வந்திருந்தவர்களில் ஒருவர், ''இந்தப் பெண்ணைக் குற்றாலத்துக்கு அழைத்துப் போங்கள்'' என்றாராம். இன்னொருவர், ''சென்னைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலேயே கொண்டு விட்டு விடுவதுதான் நல்லது'' என்றாராம். ''ஆமாம், சென்னைப் பட்டணத்துக்கு அனுப்பலாம் என்றுதான் உத்தேசம்'' என்று கார்க்கோடக் கவுண்டர் பதில் சொன்னாராம்.



''காலைக் காப்பி சூடாக இருப்பதே இல்லை என்று குறைப்பட்டுக் கொண்டீர்களே! இன்று சூடு சரியாக இருக்கா, பாருங்கள்.''

''கடவுளே! பிள்ளையார் பிடிக்கக் குரங்காக முடிந்ததே!'' என்று செந்திரு கதி கலங்கினாள். பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போனால் நிஜமாகவே பைத்தியம் பிடித்துவிடும் என்பார்களே ? தனக்கு அந்தக் கதிதான் நேருமோ ?

வந்திருந்த பெரிய மனுஷர்கள் யார் என்று ஏதாவது தெரியுமா எனச் செந்திரு பவளாயியைக் கேட்டாள். ''எனக்குத் தெரியாதம்மா! ஒருத்தர் முதலியார் போலிருக்கு. 'முதலியார்' 'முதலியார்' என்று கூப்பிட்டுக் கொண்டாங்க'' என்று பவளாயி சொன்னதும், செந்திருவுக்கு மறுபடியும் கல்லைத் தூக்கித் தலையில் போட்டது போலிருந்தது. ஏனென்றால், வந்திருந்தவர்கள் போகும் போது பேசிய இரண்டொரு வார்த்தைகள் அவள் காதில் விழுந்த போது, ''ஏதோ தெரிந்த குரல் போலிருக்கிறதே!'' என்ற சந்தேகம் ஒரு விநாடி அவளுக்கு உண்டாயிற்று. எனவே, இப்போது, ''ஐயோ ! ஒரு வேளை அவர் பங்கஜத்தின் தந்தை அய்யாசாமி முதலியார்தானோ? அப்படியிருந்தால், என்னுடைய பைத்திய நடிப்பு உண்மையிலேயே பைத்தியக்காரத்தனமாக அல்லவா ஏற்பட்டு விட்டது! சுவாமி! பழனி ஆண்டவனே! இப்படியா என்னைச் சோதிக்க வேண்டும்?'' என்று செந்திரு கதறினாள்.

இப்படி வெகு நேரம் கவலைப்பட்ட பிறகு, பழனியாண்டவனே வழி காட்டினார் என்று சொல்லும்படியாக, ஒரு வழி தென்பட்டது. செந்திரு அங்கே வந்தது முதல் தினம் சாயங்காலத்தில் ஒரு காட்சியைக் கண்டு வந்தாள். அந்தப் பங்களாவுக்கு எதிரே கொஞ்ச தூரத்தில் தோன்றிய ஒரு மலை மேலிருந்து ஒரு சுவாமியாரும் அவருடன் ஒரு பையனும் இறங்கி வருவார்கள். சுவாமியார் காவி உடை தரித்தவர்; இளம் வயதினர்; கையில் ஒரு தடி வைத்திருந்தார். பின்னோடு வந்த பையனுடைய கையில் பெட்ரோமாக்ஸ் விளக்கும், சில புத்தகங்களும் இருந்தன. இரண்டுபேரும் மலை உச்சியிலிருந்து இறங்கி, அந்தப் பங்களா வாசலில் இரும்புக் கேட்டுக்கு அப்பால் கொஞ்ச தூரம் வரையில் வந்து, அங்கிருந்து கீழே இறங்கிச் சென்ற பாதை வழியாகப் போனார்கள். தினம் மாலை ஐந்து மணிக்கு இது நடந்தது. ''அவர்கள் யார்?'' என்று செந்திரு கேட்டதற்கு, கூனூரிலிருக்கும் சச்சிதானந்த மடத்துச் சுவாமியார் என்றும், ரொம்பப் படித்தவர் என்றும், அங்கிருந்து கொஞ்ச தூரத்திலுள்ள மலைக் கிராமத்தில் இராப் பள்ளிக்கூடம் நடத்துகிறார் என்றும், அதற்காக இப்படிக் குறுக்கு வழியாய்த் தினம் போகிறார் என்றும் பவளாயி தெரிவித்தாள். தன்னுடைய விடுதலைக்கு அந்தச் சுவாமியாருடைய ஒத்தாசையைக் கோருவதென்று செந்திரு இப்போது தீர்மானித்தாள்.

பவளாயியின் உதவியைக் கொண்டு ஒரு துண்டுக் காகிதமும் பென்சிலும் சம்பாதித்தாள். தன்னுடைய நிலைமையைச் சுருக்கமாக எழுதி, எப்படியாவது தன்னை விடுதலை செய்து காப்பாற்ற வேண்டுமென்று வேண்டினாள். அந்தக் காகிதத்தை ஒரு கல்லில் நாரினால் சேர்த்துக் கட்டி எடுத்துக் கொண்டு அன்று சாயங்காலம் இரும்பு வேலி ஓரமாகப் போய் நின்று கொண்டிருந்தாள். வழக்கம் போல் சுவாமியாரும் பையனும் எதிர்ப்புறத்து மலையிலிருந்து இறங்கி வந்து பங்களாப் பாதையை அடைந்து அதன் வழியே கீழே சென்றார்கள். செந்திரு பங்களா வாசல் தோட்டத்தில் வேலி ஓரமாக நின்று பார்த்துக் கொண்டிருந்தாள். தான் நின்ற இடத்துக்குக் கிட்டத்தட்ட நேர் கீழே அவர்கள் வந்ததும், காகிதம் கட்டிய கல்லைக் கீழே போட்டாள். என்ன துரதிர்ஷ்டம்! காகிதம் கட்டிலிருந்து நழுவி எங்கேயோ பறந்து சென்றது. கல் மட்டும் நேரே கீழ் நோக்கிப் போயிற்று. க்ஷவரம் செய்யப்பட்டுப் பளபள வென்று கண்ணாடி போல் விளங்கிய சுவாமியாரின் மொட்டைத் தலையில் குறி பார்த்து விழுந்தது!

(தொடரும்)

# நல்ல தேநீர் ரசிக்கப்படும் எல்லா இடங்களிலும் – குடும்பங்கள் விரும்பி வாங்குவது லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்

குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் விரும்பி அருந்தும் டீ இதுவே. விருந்தினர்களும் அவ்வாறே. லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் திருப்தியளிக்கும் மணமுள்ள சத்து நிறைந்த, ருசிமிக்க கெட்டியான பானம். ஒவ்வொரு பாக்கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் உங்கள் குடும்பத்தார் அருந்தி மகிழ்வது. விருந்தினர்கள் விரும்பி அருந்துவது.

HIMALAYAN
FINEST GOLDEN DUST TEA
LIPTON'S
FINEST
GOLDEN DUST TEA

LHGC-10 TAM

பாக்கிங் செய்த தேயிலை மட்டுமே புதிதாகவும், மணத்துடனும் திகழ்கிறது.

**லிப்டன் என்றாலே நல்ல டீ**



# அகம்பாவம் வேண்டாம்

## ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகள்

நாம் எத்தனையோ காரியங்களைச் செய்து வருகிறோம். நாம் செய்கிறோம் என்ற அகம்பாவம் நமக்குக் கொஞ்சம்கூட வருவதற்கு இடம் இல்லை; வரவும் கூடாது. சிலபேர் அகம்பாவம் இல்லாத உயர்ந்த குணம் உடையவர்களாக இருக்கலாம். 'நமக்கு அகம்பாவம் இல்லை' என்று அவர்கள் அடிக்கடி நினைத்தால் அந்த எண்ணத்திலிருந்தே அவர்களுக்கு அகம்பாவம் வந்துவிடும். ஆகையால் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

நமக்கு அகம்பாவப்படுவதற்கு இடமே இல்லை என்பது உண்மை. எதைச் செய்ய வேண்டுமானாலும் சக்தி வேண்டும். சக்திதான் அம்பாள். அம்பாள் என்பது பெரிய சமுத்திரம். அந்தச் சமுத்திரத்தில் ஒரு திவலைதான் நம்முடைய சக்தியெல்லாம். வாக்குக்கு எல்லாம் அதிதேவதையாக இருக்கிற அவளுடைய ஒரு சிறு 'துளி அநுக்கிரக விசேஷத்தால்தான் இத்தனை பேசுகிறோம்; சகல காரியங்களுக்கும் ஆதாரமான அவளுடைய சக்தியின் சிறு துளியால் இத்தனை காரியங்களைச் செய்கிறோம். இந்த உண்மை தெரிந்தால் அகம்பாவத்துக்குக் கொஞ்சம்கூட இடமே இல்லை என்று தெரிந்து கொள்ளலாம்.



எல்லாருடைய சிரசும் தம்முடைய சரண கமலத்திலே சதா தாழ்ந்து கிடக்கும்படியான மகிமையை உடைய ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் ஸௌந்தர்ய லஹரியைப் பாடிவிட்டுக் கடைசிச் சுலோகத்தில், 'நான் என்ன அம்மா உன்னைத் தோத்திரம் பண்ணி விட்டேன்? உன் அநுக்கிரகத்தில் இது ஒரு திவலை. நான் உன்னைப் பற்றிப் பாடுவது என்பது பரிகாசம் செய்வதுபோல் அல்லவா தோன்றுகிறது? சூரியனுக்கு முன்னால் கற்பூரத்தை ஏற்றிக் காட்டினால், சந்திரனுக்குச் சந்திரகாந்தக் கல் நீரால் அர்க்கியம் விட்டால் இது பார்க்கிறவர்களுக்குப் பரிகாசமாகத் தோன்றாதா? சூரியன் கொடுத்த தேஜஸினாலே கற்பூரம் பிரகாசிக்கிறது. சந்திரனுடைய பிரகாசத்தினாலே சந்திர காந்தக் கல் குளிர்ச்சியான ஜலத்தை வடிக்கிறது. சந்திரன் இல்லையென்றால், சந்திரகாந்தக் கல் ஜலம் வடிக்குமா? அதுபோலவே உன் அருள் இல்லையென்றால் எனக்கு வாக்கு ஏது? எல்லாம் உன்னுடையது. நீ கொடுத்த வாக்கைக் கொண்டு உனக்கு அர்ப்பணம் பண்ணியிருக்கிற ஸ்துதி இது' — என்கிறார். இவ்வாறு ஆசாரியாளே சொல்லியிருக்கிறார் என்றால் நம்மைப் போல் உள்ள அல்ப மக்கள் நமக்கு ஒரு சக்தி இருக்கிறதென்று அகம்பாவப்படலாமா?

நாம் நன்றாகப் பேசுகிறோம்; எழுதுகிறோம்; பாடுகிறோம்; உலகம் புகழ் மாலை போடுகிறது. இந்த மாதிரி சமயங்களில் நமக்கு அகம்பாவம் சுலபமாக வந்து விடும். அப்போது யோசித்துப் பார்க்க வேண்டும். அந்தப் புகழ்ச்சிக்கெல்லாம் உண்மையான தகுதி நமக்கு உண்டா? எல்லாம் அம்பாளுடைய அநுக்கிரகம் அல்லவா? எந்த இடத்திலிருந்து நமக்கு அந்தச் சக்தி எல்லாம் வந்ததோ அந்த இடத்துக்கே நம் புகழ், நமது பாராட்டு எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்ய வேண்டும். அந்த மாதிரி அர்ப்பணம் பண்ணிவிட்டால் நமக்கு ஒரு குறையும் இல்லாமல் மேலும் மேலும் அம்பாளுடைய அநுக்கிரகம் கிடைக்கும். அகம்பாவமே உண்டாகாது. நல்லதோ கெட்டதோ எல்லாவற்றையும் அம்பாளுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு அவளுடைய சரண கமலத்தைக் கொஞ்சம்கூட அகம்பாவம் இல்லாமல் தியானம் பண்ணிக் கொண்டிருந்தால் க்ஷேமம் அடைவோம். லோகம் முழுவதும் க்ஷேமத்தை அடையும்.



ஆஹா! க்...ரீ...ம்!

ஆஹா! ப..ழ..ச்..சு..வை!




# ஷாலிமார்

## ஃப்ரூட் க்ரீம் மற்றும் ஆரஞ்சு க்ரீம் பிஸ்கட்டுகள்



இரண்டு மொரமொரப்பான ஷாலிமார் பிஸ்கட்டுகளுக்கு இடையிலே க்ரீம் இருந்தால், சுவை எப்படியிருக்கும் என்று எண்ணிப் பாருங்கள்! ஷாலிமார் க்ரீம் பிஸ்கட்டுகளில் பல ரகம்—ஃப்ரூட் க்ரீம், ஆரஞ்சு க்ரீம், ஏலக்காய் க்ரீம், குங்குமப்பூ க்ரீம் மற்றும் அன்னாசிப் பழ க்ரீம் அவை சுவையிலே ஒன்றை ஒன்று மிஞ்சுகின்றன! எல்லாமே வாங்கத் தோன்றும்.



சுவைக்கென்றே
பிறந்தவை ஷாலிமார் பிஸ்கட் வகை!

CMSB-24-202-Tam.

# எல்லாம் அறிந்த-ஒன்றும் அறியாதவர்

**யா**ரோ ஒரு மகாதேவனைப் பற்றி ஸ்ரீ காமகோடி பெரியவாள் முன்னிலையில் பிரஸ்தாவம் வந்தது.

"மகாதேவன்-ங்கிற பேரை இங்கிலீஷ்லே எழுது" என்று அருகிலிருந்தவரிடம் கூறினார் ஸ்ரீ பெரியவாள்.

M-A-H-A-D-E-V-A-N என்று ஸ்ரீ பெரியவாளின் முன் எழுதப்பட்டது.

"இதைத் திருப்பிப் படி" என்று மலர்ச்சியுடன் உத்தரவிட்டார் ஸ்ரீ பெரியவாள்.

"N-A-V-E-D-A-H-A-M" என்றார் எழுதியவர்.

"அதைக் கூட்டிப் படி" என்று மகா சந்நிதானத்தின் ஆக்ஞை மீண்டும் அதே மலர்ச்சியுடன் பிறந்தது. அடுத்து ஸ்ரீபெரியவாளே கூட்டிப் படித்தார்:

"என், ஏ — ந
வி, ஈ — வே
டி, ஏ — தா
ஹெச், ஏ — ஹ
எம் — ம்,

மஹாதேவன்ங்கிற பேரை இங்கிலீஷ்லே எழுதித் திருப்பிப் படிச்சா 'நவேதாஹம்'னு ஆகும்" என்று மொழிந்துவிட்டு, "நவேதாஹம்"னா என்ன அர்த்தம்?" என்று குறுஞ்சிரிப்புடன் வினவினார் ஸ்ரீ பெரியவாள்.

அருகிருந்தவர், "நவேத(அ)ஹம் என்றால் 'எனக்கு ஒன்றும் தெரியாது' என்று அர்த்தம்" என்றார்.

"எனக்கு ஒண்ணும் தெரியாதுங்கிற 'நவேதாஹ'த்தை யாருக்கு லட்சணமா கேனோபநிஷத்திலே சொல்லியிருக்கு? அப்படிப்பட்டவர்தான் **இந்த** மகாதேவன்" என்று இதயம் நிரம்பிக் கூறினார் ஸ்ரீ பெரியவாள்.

அருகிலிருந்தவருக்கு அப்படியே புல்லரித்து விட்டது. அவர் மகாதேவனின் உதவியாளர்.

"பிரம்மத்தை அறிந்து விட்டேன் என்று எண்ணுகிறவன் உண்மையில் அதை அறியாதவன். எவன் அதை அறியவில்லை என எண்ணுகிறானோ அவனே உண்மையில் பிரம்ம ஞானி" என்கிறது கேனோபநிஷதம்.

### அவிக்ஞாதம் விஜானதாம்
### விக்ஞாதம் அவிஜானதாம்

'ஆகா, உயிரினம் அடையக்கூடிய மிக உயர்ந்த நிலை பிரம்மஞானியாவதே! மகாதேவனை சாக்ஷாத் ஸ்ரீ பெரியவாளே அல்லவா அப்படிப்பட்டவர் என வருணித்துவிட்டார்' என எண்ணி உவகை உற்றார் மகாதேவனின் உதவியாளர்.

மேற்படி மகாதேவனை இக்கட்டுரைத் தொடக்கத்தில் 'யாரோ ஒரு மகாதேவன்' என்று சொல்லி யிருக்கிறது. ஆனால் சென்னை சர்வகலாசாலைத் தத்துவப் பேராசிரியராகிய டாக்டர் டி. எம். பி. மகாதேவனை அறிந்த அனைவரும், "அது **யாரோ** மகாதேவன் இல்லை; எங்கள் டி. எம். பி.தான்" என்று தீர்மானமாகச் சொல்வார்கள்.

அவரை 'யாரோ ஒரு' என்று குறிப்பிட்டதற்குக் காரணம் உண்டு. ஒருவரை அடையாளம் கண்டு கொள்வதற்கு அவரது ஊர், பேர், பெற்றோர் ஆகியோரை அறிய வேண்டும். இவை தெரியாவிட்டால் 'யாரோ ஒரு' என்றுதான் சொல்ல வேண்டும். 'ஏதவன் ஊர் ஏதவன் பேர், யார் உற்றார்?' என்றுதானே ஈசுவரனைப் பற்றிக்கூட அடியார் கேட்கிறார்? நம் மகாதேவனின் பேர் மட்டும் வெளியே தெரிந்திருந்தாலும் அவரது ஊரையும் பெற்றோரையும் அறிந்தவர் எவரும் இல்லை. அவருடனேயே முப்பத்தைந்து வருடங்களாகப் பழகிய உதவியாளருக்குக் கூட இந்த விவரங்கள் தெரியவில்லை. 'ஒன்றும் அறியாத' ஞானியாகத் தம்மை ஆக்கிக் கொண்டுள்ள ஸ்ரீ மகாதேவன், தம்மைப் பற்றி ஒன்றும் அறியாதவர்களாகவே நம்மை வைத்திருக்கிறார். ஆனாலும் ஆச்சரிய வசமாக அவரது பிறந்த தினத்தை மட்டும் எப்படியோ சில அன்பர்கள் அறிந்து வைத்



சங்கர விஹார்

திருக்கிறார்கள். அதனால்தான் தமிழ் கணக்குப் படி ஆவணி மகத்தன்று, ஆங்கிலக் கணக்குப் படி ஆகஸ்ட் 24ந் தேதியன்று அவரது அறுபதாண்டு நிறைவைக் கொண்டாடி மகிழும் பாக்கியம் நமக்குக் கிடைத்திருக்கிறது. இந்த மகிழ்ச்சியின் அடையாளமாகவே இவ்விதழ் அட்டையில் அவரது புகைப்படத்தை, அவருடைய இதய பீடத்தை அலங்கரிக்கும் ஆதிசங்கரர், ரமண பகவான், ஸ்ரீ காமகோடி பெரியவாள் ஆகியோரின் திருஉருவங்களுடன் சேர்த்துப் பிரகரிக்கிறோம்.

தத்துவ ஆராய்ச்சி, தத்துவ அறிவு, தத்துவ வாதம் இவை வேறு; தத்துவ ஞானம் வேறு. ஸ்ரீ மகாதேவன் அவர்கள் தத்துவ ஆராய்ச்சியாளரும், அறிஞரும், வாதியும் மட்டும் அல்ல. அவர் தத்துவ ஞானியே ஆவார். தாம் போதிப்பதை ஆன்மாவினுள் உணர்ந்

தவர். அறிவாளி என்பதற்கும் மேலாக அநுபூதிமான்.

இளமையில் ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தில் அவரை இறையருள் கொண்டு சேர்த்ததிலிருந்தே அவர் ஞான மார்க்கத்தில் ஈடுபட்டார். அறிவை வளர்த்துக் கொண்ட போதே, சாதாரணமாக அறிவுடன் சேர்ந்து காண்பதற்கு மிக மிக அரிதாக உள்ள அடக்கத்தையும் — அதி விநயத்தையும் உடன் பயின்றார். சிந்தனைச் செழிப்பு அலைமோதிய போதிலும் அதை வளவள என வெளியிடும் அரிப்பை எவ்விதமோ அணை போட்டுத் தடுத்துக்கொண்டார். கனிவும் கௌரவமும் பண்பும் நிறைந்த மௌனமே ஸ்ரீ மகாதேவனின் மறுபெயர் எனலாம். ஞான மார்க்க சாதனைகளைப் பின்பற்றிய போதிலும், பக்தியின் மதுரத்தையும் அறிந்து, எடுத்தியம்பி வருபவர் ஸ்ரீ மகாதேவன்.

ஸ்ரீ மகாதேவன் எழுதிய புத்தகங்கள், வகித்த பதவிகள், பெற்ற பட்டங்கள் இவை மற்றோருக்கு மலைப்பூட்டலாம். ஆனால் அவருக்கு இதெல்லாம் பெரிதல்ல. ஏனெனில் பெரியவற்றுள் எல்லாம் பெரிய வஸ்துவை அநுபவித்தவர் அவர். நல்ல குருவாக வந்து அந்த எல்லையில்லாத நலத்தைத் தமக்கு உணர்த்திய ஆதிசங்கரர், பகவான் ரமணர், ஸ்ரீ காமகோடி ஜகதாசாரியர்கள் இவர்களின் அருள் வெள்ளத்தில் மிதப்பதையே பெரிதாகக் கருதுபவர் ஸ்ரீ மகாதேவன். 'சங்கர விஹார்' என்ற பெயரில் அயனாவரத்தில் அவர் ஸ்தாபித்துள்ள ஆன்மிக நிலையத்தில் இந்த மூன்று ஆசாரியர்களின் திருவுருவப் படங்களை வைத்து வழிபட்டு வருகிறார். ஸ்ரீ மகாதேவன் ஊரில் இல்லாத சமயத்தில் ஸ்ரீ காஞ்சி ஆசாரியாளே திடீர் விஜயம் செய்து, இங்குள்ள ஸ்ரீ ஆதிசங்கரர் சித்திரத்துக்குப் பட்டாடை புனைந்தார் என்றால் அந்தப் பெருமையை என்னென்பது?

அடக்கத்துடன் கூடிய அந்தஸ்து, பக்தியுடன் கூடிய ஞானம், அநுபவத்துடன் கூடிய அறிவு முதிர்ச்சி — இவற்றுக்கு ஓர் இலக்கணமாக, அன்பு மனத்தவராக, தூய பிரம்மசாரியாக, அமைதி பூத்தவராகத் திகழும் பேராசிரியர் ஸ்ரீ டி. எம். பி. மகாதேவன் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு வாழப் பரமாசாரியர்களைப் பிரார்த்திக்கிறோம்.




## Glimpses of Kalidasa

பாரதத்தின் கவி சிரேஷ்டர் காளிதாஸன். கவித்வ சிகரத்தை எய்திய அந்த மகாநுபாவனின் எண்ணத்திலிருந்த தெளிவும், மொழியில் இருந்த எளிமையும், உவமைச் சிறப்பும் ஈடிணையற்றவை. அமுதமான சிந்தனையைத் தேனொழுக்கான மொழியில் தந்தான். இந்தக் காவியச் சிறப்புக்களை இந்த நூலில் நயம்பட எடுத்துக் காட்டியிருக்கிறார் தமிழ் எழுத்துலகம் நன்கறிந்த வைத்திய நிபுணர் ஸ்ரீ புரசு பாலகிருஷ்ணன். அவரது ரசிக இதயமும், ஆராய்ச்சித் திறனும் நூல் நெடுகிலும் வெளியாகிறது. ஷேக்ஸ்பியர், தாந்தே, கதே, டால்ஸ்டாய் ஆகியவர்களைப் போல் காளிதாஸன் வாழ்க்கைப் போராட்டங்களையும், நானாவிதக் குமுறல்களையும் வருணிக்கவில்லை என்று குறை கூறுபவர் உண்டு. ஆனால் காளிதாஸன் தனக்கென வகுத்துக் கொள்ளாத ஓர் எல்லையை அளவுகோலாக வைத்துக் கொண்டு அவனை மதிப்பிடுவது சற்றும் நியாயமல்ல. இதையும் நூலாசிரியர் தெற்றென எடுத்துக் காட்டுகிறார். மனித வாழ்வெனும் சமுத்திரத்தில் காளிதாஸன் பிரவேசிக்கவில்லை. தனக்கென்று அதில் ஒரு பூம்பொழிலை அமைத்துக் கொண்டு அதனுள் திளைத்து விளையாடினான். அந்தப் பொழிலில் தாமரையும் அல்லியும் மலர்ந்தன; சின்னஞ்சிறிய மீன் குஞ்சுகள் நீந்தி மகிழ்ந்தன. அது மட்டுமல்ல, சமுத்திரத்தை விட விஸ்தாரமான ஆகாயமும், உலகை விடப் பெரிய தாரகைகளும் கூட அந்த நீர் நிலைக்குள் பிரதிபலிக்கத்தான் செய்தன! சாக்ஷாத் சர்வேசவரனை தக்ஷிணாமூர்த்தியின் பரம யோக நிலையிலிருந்து மீனவர்களின் எளிமை வாழ்வு வரையில் பலப்பல விஷயங்களும் அதனதன் யதார்த்த உருவுடன் காளிதாஸ காவிய லோகத்தில் காணவே செய்கின்றன.

இந்நூலில் உள்ள மூன்று கட்டுரைகளில் கடைசிக் கட்டுரையில் செகோவ் எழுதிய ''செர்ரி ஆர்சர்டு'' நாடகத்தையும் காளிதாஸனின் சாகுந்தலத்தையும் ஒப்பிட்டிருப்பதில் சாரம் ஏதும் இல்லை. மற்ற இரு கட்டுரைகள் அருமையானவை.

Publishers: Bharatiya Vidya Bhavan, Chowpatty, Bombay, Price Re. 1.

## சுடர்மணி மாலை

தினசரி காலையில் எழுந்ததும் படித்துப் பாராயணம் செய்யத் தகுந்த பக்திப் பாடல்களாக இச்சிறு நூல் தொகுத்து அளிக்கிறது. தேவாரம், திருவாசகம், ஆழ்வார் பாசுரம், கந்தபுராணம், கந்தரநுபூதி, கந்தரலங்காரம் ஆகிய நூல்களிலிருந்து சில பாடல்கள் காணப்படுகின்றன. பக்திப் பாடல்களோடு ஒழுக்கம் கற்பிக்கும் நன்னெறி, நீதி வெண்பா, அறநெறிச் சாரம் முதலிய நீதி நூல்களிலிருந்து திரட்டப்பட்ட சில செய்யுள்களும் காணப்படுகின்றன. 30 பைசா தபால் வில்லை அனுப்பினால் இந்நூல் கிடைக்கும்.

சுடர்மணிப் பதிப்பகம், 6, தெற்குக் கங்கையம்மன் கோயில் தெரு, சூளைமேடு சென்னை-24. பதிப்பாசிரியர்: வேம்பத்தூர் கிருஷ்ணன்.

# சென்ட்ரல்

பி.வி.ஆர்



''நீங்கள் என்னதான் சொல்லுங்கள், நான் எத்தனையோ ரிடயரிங் ரூம்களைப் பார்த்தாச்சு. இருச்சி ரிடயரிங் ரூம் மாதிரி வராது. சென்ட்ரல்லே ரொம்ப இரைச்சல் சார்!'' - ஒரு பிரயாணி இன்னொரு பிரயாணியிடம்.

## அத்தியாயம் 3

தனக்கு முன்னால் இறங்கி நடந்த மங்களாவின் உருவம் தெரிகிறதா என்று ஜன நெரிசலிடையே கண்ணைத் துழாவித் துழாவிப் பார்த்துக் கொண்டே நடந்த கேதாரம் இரண்டு இரவு பிரயாணத்தின் அசதியையும் மறந்தான். சாமான்களைத் தூக்கிய போர்ட்டர் சினனையும் மறந்தான். மூன்றாவது பிளாட்பாரம் நொடியில் மறைந்து அவனுடைய மனத்திலேயே ஒரு ரயில் கிளம்பியது. முதல் வகுப்புப் பெட்டியில் நான்கு பர்த்துகள். இரண்டு காலி. ஒன்றில் அவன். இன்னொன்றில் ரேணுகாவின் சிநேகிதி மங்களா. ரயில் புறப்பட்டு எவ்வளவோ நேரமாகியும், அவன் அவளுடன் பேச்சுக் கொடுக்கவில்லை. அவளுடைய அழகையே ரசித்துக் கொண்டு வந்தான். அவளுடைய முகத்தின் பொலிவிலும், பிரகாசத்திலும் அவனுடைய கண்கள் கூசின. ஒரு கணம் கண் இதழ்கள் மூடிக் கொண்டன.

திடீரென்று கேதாரம் மூச்சு வலிக்க நின்றான்.

''யோவ், எங்கியா பார்த்துனு வர்றே.... வளியைப் பார்த்துப் போயா....''

எதிரே வந்த போர்ட்டர் கத்தினான்.

கேதாரத்துக்கு வெட்கமும் பிறகு அதை மீறிய ஆத்திரமும் பீறிட்டுக் கொண்டு வந்தன. ஆனால் என்ன செய்வது? தப்பு அவனுடையதுதான். மூன்று நிமிடங்களுக்கு முன் பார்த்த மங்களாவைப் பற்றி அவன் அதற்குள் கனவு காண ஆரம்பித்தால்? தெய்வத்துக்கே பொறுக்காது. சென்ட்ரல் ஸ்டேஷன் போர்ட்டருக்கு, அதுவும் சுமையுடன் வருகிறவனுக்கு எப்படிப் பொறுக்கும்?

கேதாரம் ரிடையரிங் ரூமை நோக்கி நடந்தான். அங்கே அவனைச் சந்திக்க இருக்கும் மங்களாவைப் பற்றித் தற்போதைக்குக் கனவு காணக் கூடாது என்ற சங்கற்பத்தோடு நடந்தான்.

* * *

அறுபது வருடங்களுக்கு முன்னால் பங்குனி உத்தரத்தன்று சிதம்பரத்தில் பிறந்த சினனுக்கு இந்த வருடம் சஷ்டி அப்த பூர்த்தி விழா நடக்க வேண்டும். நல்ல வேளையாக அவன் ஒரு கட்சித் தலைவராகவோ, மந்திரியாகவோ வாய்க்க வில்லை. இல்லா விட்டால் அறுபது காளைகள் பூட்டிய வண்டியில், அறுபது சவரன்கள் பரிசளித்து, அறு

பது மாலைகளை அணிவித்து, அவனை அலங்கோலப்படுத்தியிருப்பார்கள்.

பதினாறும் வயதில் சென்னைக்கு ஓடி வந்த அவன் வெகு சீக்கிரத்திலேயே போர்ட்டர் பதவியை ஏற்றுக் கொண்டான். அரையணா, ஓர் அணாவுக்குப் பெட்டி படுக்கை, கூடை எல்லாம் தூக்கிய அவன் இப்போது ஒரு பிரயாணியின் சாமான்களில் கை வைத்தால் போதும்; ஒரு ரூபாய், குறைந்த பட்சம் கட்டணமாக வசூல் செய்து விடுவான். விலைவாசி ஏற்றத்தின் கணக்கு அவனுக்கு அத்துபடி. எந்தப் புள்ளி விவரக் கணக்கு அதிகாரியாலும் அவனுடன் வாதம் செய்து ஜயித்துவிட முடியாது.

கருகரு வென்ற மேனி. சதை சுருங்கித் தொய்ய ஆரம்பித்திருந்தாலும் மிடுக்கான நடை. பார்வை. நெற்றியில் வெள்ளை வெளேரென்ற விபூதி. நடுவே இருபது பைசா நாணய அளவுக்குக் குங்குமம். தலை ஒரு தும்பைப் பூ பந்து. ஆனால் மீசை இன்னும் முழுதும் நரைக்கவில்லை.

சீனனுக்குக் குடும்பக் கவலை என்று எதுவும் இல்லாவிட்டாலும், பணத்துக்குத் தேவை வற்றாத நதியாக ஓடிக் கொண்டே யிருந்தது. ஊரில் இரண்டு காணி நிலம் இருக்கிறது. அதை அவனுடைய மனைவியும் பிள்ளையும் பார்த்துக் கொள்கிறார்கள். பெண்ணை ஒரு நாயனக்காரன் கலியாணம் செய்து கொண்டு, தன் இசையால் அவளையும் ஊரையும் சித்திரவதை செய்து கொண்டிருக்கிறான். சேரிக் கலியாணங்கள், திரௌபதி அம்மன் கோயில் விழா, திருப்பதி பழநி போன்ற மலைகளுக்குச் செல்லும் பக்தர் கோஷ்டி என்று அவனுடைய 'பீப்பீ' நடக்கிறது. ராஜரத்னம் காற்றுக்கு வடிவம் கொடுத்து, உயிர் கொடுத்து ஸ்வரங்களை ஒரு மலர் மாலையாக வடித்துக் கொடுத்தால், சீனனுடைய மாப்பிள்ளை காற்றைச் சிதற அடித்து, மாலையின் மலர்களையே கசக்கிப் பிழிந்தான். ஆனாலும் என்ன? அவனுடைய குழாயும் சோறு போடத் தான் செய்தது.

மனைவி ஊரில் இருந்ததால் சீனனுக்கு இல்லறம் என்று ஒன்று இல்லாமல்போய் விடவில்லை. கடந்த இருபது வருடங்களாக வால்டாக்ஸ் ரோடு மரகதம் அவனுடைய இல்லத்தரசி. மரகதத்துக்கு இப்போது வயது நாற்பத்தாறே, நாற்பத்தேழோ தான். கண்டிப்பாக அதற்கு மேலில்லை! மத்தியான வேளைகளில் அவள் ஸ்டேஷன் பிளாட்பாரங்களில் தென்படுவாள். பார்சல் மூட்டைகளிலிருந்து சிதறி விழும் மீன்,



உருளைக்கிழங்கு, தக்காளி போன்ற காய் கறி வகைகளிலிருந்து, மூட்டைகளைக் குத்தி எடுத்துக் கிடைக்கும் அரிசி, பருப்பு, கோதுமை வரை எல்லாம் அவ ளுக்குச் சொந்தம். அவளை யாரும் ஏதும் சொல்ல மாட்டார்கள். ஒரு தடவை அவளை ஒரு கோழியும் கையுமாக ஒரு வன் — பாவம், அவன் சட்டத்தை நிலை நாட்ட வேண்டும் என்று நினைத்த பைத் தியக்காரன் — பிடிக்க, அவள் கூட்டத் தைச் சேர்க்க, அவனால் அவளுடைய கற்புக்கே பங்கம் வர இருந்ததாகக் கூட்டம் நினைக்க, ஒன்றும் என்ன பிளாட்பாரமே அல்லோலகல்லோலப் பட்டது. மரகதம் அன்றுவிட்ட கண்ணீர் ஆறாகப் பெருக்கெடுத்தது!

இப்பேர்ப்பட்ட இல்லத்தரசிதான் சீனனுடன் சேர்ந்து வாழ்ந்து வந் தாள். முப்பத்தொன்பதில் யுத்தத்தில் சேர்ந்த அவளுடைய கணவன் கண்ணு யிரம் ஹிட்லரும் டோஜோவும் செத்த பிறகும் திரும்பி வரவில்லை. அவன் சிப்பாயாக யுத்த களத்தில் இறந்தான் என்ற செய்தியும் கிடைக்கவில்லை. அப் படிப்பட்ட ஒரு தகவல் வரும் வரைக் கும், தன் மஞ்சளுக்கும் குங்குமத்துக் கும் அழிவில்லை என்று கருதிய மரகதம், நாளடைவில் கண்ணுயிரத்தின் சிம்மாச னத்தில் சீனனை ஏற்றி வைத்தாள். சிந்தாதிரிப் பேட்டை காக்ஸ் சேரியி லிருந்து வால்டாக்ஸ் ரோட்டுக்கு வந் தாள். நாளாவட்டத்தில், யானைகவு னிக்கு அருகே, யாரோ வாங்கிப் போட் டிருந்த ஒரு நிலத்தில் குடிசையைப் போட்டாள். அவளைப் பார்த்து இன் னும் சிலர் போட்டார்கள். கால னிக்கு 'மரகதம் காலனி' என்று பெயர் வைத்தாகி விட்டது. நிலத்தின் சொந்தக் காரர் கீழ்க் கோர்ட்டுக்கும் மேல்கோர்ட் டுக்குமாய் ஏறி இறங்கிக் கொண்டிருந் தார். தான் பாவாடை கட்டிய நாளி லிருந்து அதே இடத்தில்தான் வசித்து



வருவதாக மரகதம் சத்தியம் செய்து சாட்சியம் சொல்ல, அவளுக்கு ஆதரவாக நாலு பேர் எங்கிருந்தோ வந்து முளைத்தார்கள்.

மொத்தத்தில் மரகதம் காசு கொடுக்காமல் வாங்கிய நிலத்தில், சினனுடன் தாம்பத்தியம் நடத்தி வந்தாள். அவளைப் பற்றி நினைக்க நினைக்கச் சினனுக்குப் பெருமையும் அதே சமயத்தில் தன் கட்டிய மனைவிக்கு அவளைப் போல் சாமர்த்தியம் இல்லையே என்ற வேதனையும் உண்டாயிற்று.

இந்தச் சினன் (வில்லை நம்பர் 13) பெட்டி, ஹோல்டால், தோல் பையுடன் ரிடையரிங் அறையை அடைந்தான். வயதான ஓர் ஆங்கிலோ — இந்திய மாது. "என்னப்பா, போர்ட்டர், ஆளுங்க வர்றாங்களா?" என்று கேட்டாள் அவனைப் பார்த்ததும்.

"ஆமாங்க, அம்மா... பம்பாய் மெயில் கிராக்கி."

"பேரு தெரியுமா?"

"இதோ அவரே வராரு."

கேதாரம் அருகே வந்ததும், "என்ன ஸாமி, ரிஸர்வேஷன் பண்ணியிருக்கே?" என்று கேட்டான் சினன்.

"ஓ, எஸ்!" என்றான் கேதாரம், அந்த ஆங்கிலோ-இந்திய ஸ்திரீயைப் பார்த்து. பிறகு, "யூ ஆர் தி மாட்ரன் ஹியர், ஐ ஸப்போஸ்?" என்றான்.

"யெஸ்... யுவர் நேம் ப்ளீஸ்?"

"கேதாரம். எஸ். கே. கேதாரம், டிவிஷனல் என்ஜினீயர், வெஸ்டர்ன் ரயில்வே... பாம்பே. ஐ ஸெண்ட் எ டெலிகிராம்."

"தாங்க்யூ. போர்ட்டர்! இரண்டாம் நம்பர்லே வை.... ரூம் நெம்பர் டூ, ப்ளீஸ்...." என்று கூறி மாட்ரன் முறுவலித்தாள்.

இரண்டாம் எண் அறையில் சாமான்களை வைத்து விட்டு, சிவப்பு முண்டாசைக் கழற்றினான் சினன்.

"என்னப்பா கொடுக்கணும், போர்ட்டர்?" என்று கேதாரம் கேட்டுக் கொண்டே பாக்கெட்டில் கை வைக்கப் போனான்.

"குடு ஸாமி... ஒனக்குத் தெரியாத கூலியா...? ரூபாய்க்கு மூணு படி போடறேன்னான்.... மூணு ரூபாய்க்கு ஒரு படி கிடைக்க மாட்டேங்குது... குடு. பம்பாயிலே எம்மாம் குடுத்தே, அதைக் குடு."

சினன் பேசிக் கொண்டிருந்தான். கேதாரத்தின் கை ஒவ்வொரு பாக்கெட்டிலும் மூன்று மூன்று முறைகள் நுழைந்து நுழைந்து உதறியது.

"போர்ட்டர்!"

"என்ன ஸாமி?"

"பர்ஸ் போயிடுத்துப்பா."

"பூடிச்சா... நல்லாப் பாரு ஸாமி. சென்ட்ரல்லே படா பேஜாரு ஸாமி.... நல்லாப் பாரு...."

"பார்த்துட்டேன், போர்ட்டர்.... காணும்.... ராத்திரி கடப்பாவிலே சோடா குடிக்க பர்ஸை எடுத்தேன். குடிச்சப்புறம் பாக்கெட்டிலேதான் போட்டேன். இப்போ காணும்."

"பர்ஸை அநியாயமா தாரை வாத்திட்டியே, ஸாமி... எவ்வளவு பூடுச்சு?"

"இங்கேதாம்ப்பா, போச்சு. ஆமாம்ப்பா, ஸ்டேஷன்லேதான் போச்சு. பாஸை எடுத்துத் தனியா வைச்சேனே. ஆமாம், பேஸின் பிரிட்ஜிலே எடுத்து ஷர்ட் பாக்கெட்டிலே போட்டுண்டேன்... இப்போ யார்கிட்ட கம்ப்ளெயிண்ட் பண்ணணும்?"

"கம்ப்ளெயிண்ட் கொடுத்து என்ன ஸாமி பண்ணப் போறே நீ? கூவத்திலே போட்ட கணக்குத்தான். தினம் தினம் எம்மாம் பணம் எம்மாம் பர்ஸிலிருந்து அபேஸ் ஆவுது? நெறைய பூட்ச்சா ஸாமி....? பாவம்!"

சினனுடைய கேள்விகளையோ அனுதாபத்தையோ லட்சியம் செய்யாமல், கேதாரம் பெட்டியைத் திறந்தான். அவன் பிளாட்பாரத்தில் நடந்து வருகையில்தான் யாரோ பறித்திருக்கிறார்கள். அவன் மங்களாவை நினைத்துக் கனவு நடை போட்டிருக்கிறான். பின்னால் யாரோ பர்ஸைப் பிடுங்கி ஓடியிருக்கிறார்கள். ஒரு கணம் மனம் சலித்து, மங்களாவைச் சபித்தது.

பெட்டியிலிருந்து பெரிய பர்ஸ் ஒன்றை எடுத்த கேதாரம், "ஏம்ப்பா, பத்து ரூபாய்க்குச் சில்லறை இருக்கா?" என்று கேட்டான்.

"இதுதான் ஸாமி, போணி எங்கிட்டேது?"

"எங்கே கிடைக்கும்?"

"புக்கிங் ஆபீஸ்லே வாங்கியாரட்டுமா?"

சினனை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்தான் கேதாரம்.

"என்ன ஸாமி, அப்படிப் பார்க்கிறே... சென்ட்ரல் ஸ்டேஷன் போர்ட்டர் ஒன் பத்து ரூபாயோடே ஓடிடுவான்னு நீ நினைக்கிறியா? நான் ஒன்னை நம்பறேன் சாமி... அப்பாலே வந்து வாங்கிக்கறேன். பங்களூர் வர்ற டயம்."

சினன் வெளியேற முற்பட்டான்.

"இருப்பா... நீயே போய்ச் சீக்கிரம் சில்லறை வாங்கி வா.... நான் உன்னை நம்பறேன்...."

"அப்படிச் சொல்லு ஸாமி. என் பேரு சினன். 13ம் நம்பர். எம் மூஞ்சியைப் பார்த்துக்க.... எவன் நெற்றியி

லும் இந்த அம்மன் குங்குமம் இருக்கவே இருக்காது !''

சீனன் போன பிறகு கேதாரம் எரிச்சலுடன் உடையை மாற்றினன். திறந்த பெட்டியில், ரேணுகா மங்களாவிடம் கொடுக்கச் சொன்ன சாக்லேட் பெட்டி கண்ணில் பட்டது. அதை அவன் கையில் எடுத்தான். வட்ட வடிவமான, நீல நிற டப்பா.... ஓவியங்களில் யானையும், சிங்கமும், புலியும் கம்பீரமாக நின்றன. மிக உயர்ந்த ரக சாக்லேட் என்று அவன் வாய் முணுமுணுத்தது.

ஒரு ரூபாயை வாங்கிக் கொண்டு சீனன் போனன். அதன்பின், பல் தேய்த்துக் குளித்து விட்டுக் கேதாரம் பேப்பர் படிக்கலானன். மனம் ஓடவில்லை. பறிபோன பர்ஸில் எத்தனை ரூபாய் இருந்தது என்று அவன் எவ்வளவு யோசனை செய்தும் பிடிபடவில்லை. மூன்று பத்து ரூபாய் நோட்டுக்கள் என்று மட்டும் நிச்சயமாகத் தெரிந்தது. ஒரு ரூபாய் நோட்டுக்கள் எவ்வளவு? சில்லறை எவ்வளவு?

அவன் மண்டையைக் குழப்பிக் கொண்டான். மங்களா மீண்டும் கண் முன்னல் தோன்றினள்.

அதே சமயம், ''சார்'' என்ற குரல் அறை வாயிலிருந்து கேட்டது.

பேப்பரை ஒதுக்கி விட்டுப் பார்த்தான் கேதாரம். ஒரு பதினைந்து அல்லது பதினறு வயதுப் பையன் நின்று கொண்டிருந்தான்.

''என்ன வேணும் ?''

''நீங்கதானே இன்னிக்குப் பாம்பே மெயிலில் வந்தீர்கள்?''

''ஆமாம்... பர்ஸ் உன் கையிலே கிடைச்சிருக்கா ?''

வந்தவன் விழித்தான். பிறகு, ''பர்ஸா ? என்ன பர்ஸ்? என் பெயர் பாபு. மங்களாவின் தம்பி... என் அக்கா அனுப்பினள். பாம்பேயிலிருந்து ரேணுகா ஏதோ கொடுத்துவிட்டிருக்கிருள் என்று சொன்னீர்களாமே?'' என்ருன்.

தன் அவசர புத்தியை ஒரு தரம், வெறும் எண்ணத்தாலேயே அடித்துக் கொண்ட கேதாரம், '' ஆமாம், ஆமாம் ! இதோ தரேன்... ஆனல் உன் அக்கா தானே வருவதாகச் சொன்ளுளே?'' என்ருன்.

''சொன்னுளோ என்னமோ எனக்குத் தெரியாது. 'நான் சொன்னேன்னு சொல்லி வாங்கி வா'ன்னுள். அது தான் வந்தேன். தரேளா?''

''நீ அவள் தம்பியா ?''

''அதான் சொன்னேனே.''



''இருந்தாலும் கேட்டேன். கேட்கப் படாதா ?''

''ரேணுகா கொடுத்தனுப்பியதைத் தருகிறீர்களா?''

''உன் பெயர் என்னன்னு சொன்னே?''

''சிவசங்கரன்.''

''பாபுன்னு சொன்னே போல் இருக்கே ?''

''அப்போ தெரிஞ்சிருந்து ஏன் கேட்கிறீர்கள்? என்னை நம்பினல் கொடுங்கள். இல்லா விட்டால் என்னமோ செய்யுங்கள்.''

''இந்த வயசிலேயே இந்தக் கோபம், வர்றதே உனக்கு!''

''கோபம் வர்றதுக்கு ஒரு வயசுன்னு வரணுமா? நீங்க நம்பாதது மாதிரி

இருக்கு. நான் வர்றேன்..... அப்போதே அக்காகிட்டே சொன்னேன், என்னாலே போக முடியாதுன்னு... அவள் தான் கெஞ்சினாள் !''

'' இந்தா.... இதுதான் ரேணுகா கொடுத்தது...'' சாக்லேட் டப்பாவை நீட்டிய கேதாரம், ''ஏன் உன் அக்காவால் வர முடியவில்லை?'' என்று வியப்புடன் கேட்டான்.

''தெரியாது. ஒரு வேளை உங்களைப் பார்க்கப் பிடிக்கலையோ என்னவோ...! நன்றி !''

பாபு அடுத்த கணம் அறையை விட்டு வெளியேறினான்.

கேதாரத்துக்குத் துக்கமும் ஏமாற்றமும் பிறிட்டுக் கொண்டு வந்தன. மங்களாவின் வருகையை நினைத்து அவன் காத்துக் கொண்டிருந்தான். ஆனால் அவள்? தம்பியை அனுப்பிவிட்டாள். ஒரு வேளை, இது அவளுடைய உதாசீனத்தைக் காட்டுகிறதோ ?

திடீரென்று ஆள் அரவம் கேட்டது.

பார்த்தான்.

மாமா வந்து கொண்டிருந்தார்.

''டேய் கேதாரம், யாருடா ஒரு பையன் ஒரு சாக்லேட் டப்பாவுடன் போய்க் கொண்டிருக்கிறான். ஒரு பெண் வேறு அந்தப் பையனுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள்.''

''மாமாவா... வாருங்கள், மாமா.''

''யாருடா அந்தப் பெண்?''

''பெண்ணா ?''

''ஆமாம்டா. பின் என்ன சொன்னேன் நான் ? எருமைன்னா சொன்னேன்? ஒல்லியா ஒரு பெண். சிவப்புப் புடவை கட்டிண்டு ஒரு பெண்.''

''தெரியாது மாமா. உட்காருங்கள்.''

''உட்காருகிறேன், உட்காருகிறேன். சரியா மூணு மணிக்கு வர்றோம்னு சொல்லியிருக்கிறேன்... அவர்கள் காரை அனுப்புகிறார்கள்.''

''உம்.''

'' பெண்ணைப் பிடிச்சுட்டா உடனேயே சரின்னு சொல்லித் தொலைக்காதே.... புதன்கிழமை க்ராம்ப்டன் என்ஜினீயர் பெண்ணைப் பார்க்கணும். வெள்ளிக்கிழமை.....''

''தெரியும், மாமா.... ஓய்வுபெற்ற பிரதம காரியதரிசி பெண். என்னைக் கேட்டா, நீங்க பார்த்து வைச்சிருக்கிற எல்லாப் பெண்களையும் ஒரு சுயம்வர மண்டபத்தில் கூட்டமாகக் கூட்டி வைத்துவிடலாம்.''

''உன்னைக் கேட்டால்தானே? உன்னைக் கேட்க மாட்டேன். பயப்படாதே. அது சரி, மாமிக்கும் எனக்கும் என்ன வாங்கிண்டு வந்திருக்கே, பம்பாயிலிருந்து?'' என்று கேட்டார் மாமா.

''இங்கே கிடைக்காதது என்ன புதுசா அங்கே கிடைக்கிறது? ஒண்ணும் வாங்கிண்டு வரல்லே.''

''உன் வழக்கம்தான் தெரியுமே.... அது சரி. கண்ணா, ஏன் இங்கே வந்து இறங்கினே? உட்லண்ட்ஸ் இருக்கு, ஸ்வாகத் இருக்கு, தாசபிரகாஷ் இருக்கு.....''

'' இங்கே சௌகரியத்துக்கு என்ன குறைச்சல் ?''

''அதுவும் சரிதான். நீ ரயில்வேக்காரன். வேறே எங்கே தங்குவே ?''

''மாமி, பங்கஜம், கமலா எல்லாரும் சௌக்கியமா ?''

''உம், உம்... சௌக்கியம்தான்.... நீ இந்தத் தடவையாவது குத்தாலத்துக்கு வந்து, ஆசிரமத்தைப் பார்த்து விட்டுப் போகணும். விளையாட்டுப் போல ஆரம்பிச்சு, ஆறு மாசம் ஆகலே. நூத்தி ஏழு பேர் வந்து சேர்ந்தாச்சு. செலவை நினைச்சாத்தான் பயம் வயத்தைக் கிள்ளறது.''

''இந்த வயசிலே இது அநாவசியம் உங்களுக்கு !''

''எதுடா, அநாவசியம்? அநாதைக் குழந்தைகளுக்கு மட்டும் ஆசிரமம் நடத்தலாம். வயசான அனாதைக் கிழங்களுக்கு நடத்தப்படாதோ ? எத்தனை தகப்பன்மார்கள், ! பிள்ளைகளைப் பெத்து வளர்த்து ஆளாக்கி, அந்தப் பிள்ளைகள் கிட்டேயிருந்து ஓர் ஆதரவும் கிடைக்காமல் கஷ்டப்படுகிறார்கள்! எத்தனை பேர் வயசுக் காலத்திலே குளிரிலேயும் மழையிலேயும் கஷ்டப்படுகிறார்கள் ?... ஒரு சாப்பாடு, இரண்டு காப்பி, ஒரு பலகாரம். ஒரு நாளைக்கு இன்னிக்கெல்லாம் இருந்தால் ஒண்ணரை ரூபாய் ஆகிறது. முத்துசாமி வாண்டையார் ஆசிரமம் கட்டறதுக்கு இடம் கொடுத்தார். அஞ்சு வேலி நிலமும் எழுதி வைக்கிறேன்னு சொல்லியிருக்கார்.... நானும் நடனம், நாடகம் ஏற்பாடு பண்ணி வசூல் பண்றேன்.... எதுக்கு? கண்ணை மூடிண்டு, ஊதாரித்தனமாச் செலவு பண்ற பிள்ளைகளின் கண்ணைத் திறக்கத்தான். முப்பது வருஷங்கள் போனால் இவன்கள் பிள்ளைகளும் இவன்களைக் கைவிடத்தானே போறது?! அதை இன்னிக்கே ஞாபகப்படுத்துகிறேன்... என் யோசனை இன்னிக்கு உனக்குச் சிரிப்பாக இருக்கலாம்... ஆனால், உனக்கே தெரியும், பாரு... பாரு...''

மூச்சு விடாமல் மாமா பேசிக் கொண்டே போனார்.

நடுவே, திடீரென்று ஒரு பெண் பிரவேசித்தாள்.

கேதாரம் திடுக்கிட்டவனாய் எழுந்தான்.

(தொடரும்)

# 'இல்லை' என்று சொல்லாதவர்



'**வ**ரும்பொழுது மிருகமாக வந்தேன். போகும் பொழுது மனுஷியாகப் போகிறேன்.'

உள்ளத்து உணர்வை இப்படி அருஞ்சொல்லாக வடித்தவள் செல்லாமிருதம் என்னும் பெண். ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த சாரதா வித்யாலய ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் படிப்பை முடித்துக் கொண்டு பிரியா விடை பெற்றபொழுது அவளது உணர்ச்சிகள் உதிர்த்த சொற்கள் இவை.

செல்லாமிருதத்தின் பெற்றோர் செல்லம் அமிருதம் என்னும் இரு சொற்களையும் சேர்த்து அருமை பெருமையுடன் பெயர் சூட்டியிருந்தாலும் மாட்டுத் தொழுவமே கதியென மிருகமாக்கி விட்டனர். மாடாக உழைத்தாலும் அவளால் அந்தக் குடும்பத்தில் நல்ல பெயர் எடுக்க முடியவில்லை.

ஆனால்...

வாயில்லாப் பிராணிகளிடம் அன்பாக நடந்து கொண்டதன் பயன்தானோ, என்னவோ, அன்பே உருவான ஸ்ரீமதி கோகிலா காளஹஸ்தியிடம் ஆதரவு கேட்டு அவள் வர நேர்ந்தது. கண்ணைப் போற்றப் படும் எண்ணும் எழுத்தும் போதிக்கும் பணியை மேற்கொள்ளும் வாய்ப்பும் கிட்டியது. மிருகமாக வந்து மனுஷியாக மாறிச் சென்ற செல்லாமிருதம் இன்று குடியும் குடித்தனமுமாகத் தம் குழந்தைகளுக்கு அன்பையும் செல்வத்தையும் அமிருதமாக வர்ஷித்து வருகிறார்.

ஸ்ரீமதி கோகிலா காளஹஸ்தி கல்விப் பணியைத் தான் மகிழ்ந்து ஏற்பார் என்று அவர் பெற்றோருக்கு எப்படித்தான் முன்கூட்டியே தெரிந்ததோ? இளம் பிராயத்தில் இவருக்கு ஹாஸ்டல் வாழ்க்கையையும் பழக்கி வைத்தார்கள். தமது பதினோராவது வயதிலேயே இவர் அங்கு 'ஸர்விஸ் மெடல்' பெற்றார்.

இன்று சென்னை மாநகரிலேயே நெடிதுயர்ந்து, பரந்து விரிந்து நிற்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் பள்ளிக்கு அடிக்கல்லாகத் திகழ்ந்த ஸ்ரீ வாசுதேவாச்சாரியார் 1937-38ம் ஆண்டுகளில் ஸ்ரீமதி கோகிலாவைப் பெண்கள் பகுதிக்கு ஆசிரியையாக நியமித்தார். அந்தத் தவச்சீலரின் நிழலில் ஆசிரியப் பொறுப்பு ஏற்ற ஸ்ரீமதி கோகிலா காளஹஸ்தியின் பணி மேலும் சிறந்தது, சகோதரி சுப்பலக்ஷ்மி அம்மாளின் பணிப் பார்வை பட்டு.

இளம் விதவைகளுக்காகச் சகோதரி சுப்பலக்ஷ்மி அம்மாள் ஆற்றிய பணி ஊர் மட்டும் அல்ல; உலகமும் அறிந்தது. வாழ்வின் வளம் குன்றிவிட்ட இளம் விதவைகளின் கவனத்தை வேறு புறம் திருப்பிச் சமூகத்துக்கு உதவச் செய்த அவர் தமது இப் பெரும் பணிக்கு ஸ்ரீமதி கோகிலாவைத் தேர்ந்தெடுத்தார். சகோதரியின் கணிப்பு சரியாக அமைந்தது. ஸ்ரீமதி கோகிலா காளஹஸ்தி சகோதரியின் பெயருக்குப் பெருமை தேடித் தந்ததோடு அல்லாமல், தம் பெயருக்கும் பெருமை தேடிக்கொண்டார். ஏறக்குறைய முப்பத்து மூன்று ஆண்டுகள் தலைமை ஆசிரியையாகத் திகழ்ந்த பெருமை ஸ்ரீமதி கோகிலா காளஹஸ்திக்குக் கிட்டியிருப்பது போல் வேறு எவருக்காவது கிட்டியிருக்குமோ, என்னவோ?

கணவர் ஸ்ரீ காளஹஸ்தி அவர்களும் ஆசிரியப் பணியை மேற்கொண்டவர்தாம். கிறிஸ்துவக் கல்லூரியைச் சேர்ந்த உயர்நிலைப் பள்ளியில் உதவித் தலைமையாசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். எனவே, கரம் பிடித்த கணவரின் ஒத்துழைப்பும் இத்துறையில் இவருக்கு உதவியது.

சாரதா வித்யாலய ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் இன்று நாற்பது ஆசிரியைகளும், நூற்றறுபது பயிற்சி மாணவிகளும் மாடல் பள்ளியில் எழுநூற்றைம்பது சிறுர்களும் உள்ளனர்.

"கோகிலா உளநூல் அறிந்தவர். குழந்தைகளின் மன இயல்பை நன்கு புரிந்து கொண்டவர். அறக் கல்வி புகட்டுவதிலும் ஆற்றல் மிகுந்தவர். இவருடைய வகுப்பு என்றால் மாணவிகளுக்கு ஒரே உற்சாகம்!" என்றார், இன்று அவருடைய ஸ்தானத்துக்கே உயர்ந்திருக்கும் எம்.வி. ஜெயலக்ஷ்மி.

"மாணவிகள் என்றதும் ஒன்று கேட்கத் தோன்றுகிறது. எத்தனையோ மாணவிகள் இங்கு சேர்ந்து பயிற்சி பெற விண்ணப்பம் செய்வார்களே! எப்படித் தேர்வு செய்வீர்கள்? இவர் முகத்தைப் பார்த்தால் யாருக்கும் இல்லை என்று சொல்ல மாட்டார்போல் இருக்கிறதே!" என்று நான் கேட்ட





# ரோஜாவின் ரகசியம்!

ரோஜாப் பூ ஒரு காலத்தில் முள் இல்லாத தூய வெண்மையான பூவாக மலர்ந்து மகிழ்ச்சி பரப்பியது. காதல் தெய்வம் வீனஸ் ரோஜாப் பூவுக்குத் தெய்விகமூட்டி வளர்த்து வந்தாள். ஒரு நாள் வீனஸின் துஷ்டச் சிறுவன் க்யூபிட் தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருக்கும்போது ரோஜா மலரின் இதழினைப் பறித்தான். அதன் உள்ளே ஒரு தேனீ தேனை உறிஞ்சி ரசித்துக் கொண்டிருந்தது. அந்த இனிய நேரத்தில் இடையூறு விளைவித்த க்யூபிட்டைத் தேனீ கோபமுற்றுக் கொட்டி விட்டது. வலி பொறுக்க முடியாமல் க்யூபிட் அழுதுகொண்டே தன் அருமை அன்னையிடம் ஓடினான்.

தன் தவப் புதல்வனுக்கு நேர்ந்த துயரத்தைக் கண்ட வீனஸ் தெய்வம் தன் தோட்டத்திலுள்ள தேனீக்களின் கொடுக்குகளை யெல்லாம் பிடுங்கி ரோஜாச் செடிகளின் தண்டின்மீது பொருத்திவிட்டாள். அதன் பிறகு ரோஜாச் செடிகளுக்கு முட்கள் நிரந்தர அங்கமாகி விட்டன.

அத்தோட்டத்துக்கு வெளியே இருந்த தேனீக்கள் தங்கள் தோழர்களுக்கு நேர்ந்த அவமானத்தை எண்ணிக் கோபமுற்று வீனஸைக் கொட்டின. வேதனை தாங்காது அவள் போட்ட கூச்சல் வெள்ளை ரோஜாவைச் சிவப்பாக்கியது.

வீனஸின் காதல் நடவடிக்கைகளைப் பற்றி ரகசியமாகக் கூறிய தேவதை ஒன்று க்யூபிட்டிடம் ரோஜாப் பூவைக் கொடுத்து, ரகசியத்தைப் பாதுகாக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டது. ரோஜா இரகசியத்தின் அடையாளம். ரோம கத்தோலிக்கப் பாதிரிமார்கள் தங்கள் தலைமீது ரோஜாப் பூவைச் செருகி, 'ஆத்ம சுத்திக்காக எங்களிடம் கூறப்படும் இரகசியங்களை வெளியிட மாட்டோம்' என்று உணர்த்துவார்கள்.

(ரோமாபுரிக் கதை) -- பி.எஸ்.எம்.

---

தற்கு உடனே கிடைத்த பதில்: ''சரியாகச் சொன்னீர்கள். கோகிலாவின் வாயிலிருந்து 'இல்லை' என்ற சொல் வருவதில்லை. எல்லோரிடமும் சுமுகமாகப் பேசிக் கொடுத்து, இன்னின்ன காரணங்களால் இவர்களை யெல்லாம் தேர்ந்து எடுத்தோம். இடம் இருந்தால் எல்லோரையுமே தேர்ந்தெடுத்திருப்போம். பற்றாக்குறைக்கு நாங்கள் பொறுப்பல்லவே என்பது போல் புண்படாமல் பேசி அனுப்புவார்!

''எத்தனையோபேர் இங்கு பயிற்சி பெற்றுப் போயிருக்கிறார்கள்! அத்தனை பேருக்கும் இது தாய் வீடு. இவரை வந்து பார்க்காமல் போக மாட்டார்கள். தங்களுக்கு உள்ள சிரமங்களையும் கூறித் தீர்வு கண்டு செல்வார்கள்! பலர் இவருக்குக் கடிதம் எழுதி ஆலோசனை கேட்பார்கள். அத்தனைக்கும் அலுத்துக் கொள்ளாமல் பதில் எழுதும் அமைதி இவருக்குக் கை வந்த கலைச் சொத்து'' என்றார் மாடல் பள்ளி தலைமை ஆசிரியை ஸ்ரீமதி ராஜம்மா.

''எத்தனையோ பெண்களுக்குத் தாய்போல் விளங்கும் இவருக்கு எத்தனை குழந்தைகள்?'' என்று கேட்டேன்.

''அதுதான் எங்களுக்குப் பெரிய குறை. இவருக்கென்று ஒரு குழந்தைகூடக் கிடையாது, இவர் பெயரைச் சொல்ல; இவர் குடும்பத்தை விளங்க வைக்க.''

''அப்படிச் சொல்லாதே. அந்தக் குறையில்தான் ஒரு நிறை இருக்கிறது. எனக்கென்று ஒரு குழந்தை இருந்தால் இந்தக் குழந்தைகளிடம் இப்படி அன்பைக் காட்ட முடியுமோ, என்னமோ? ஆண்டவன் அறிந்துதான் எனக்கு இப்படி ஒரு வழி செய்து வைத்திருக்கிறான்!'' — நிஷ்களங்கமாக மறுக்கிறார் ஸ்ரீமதி கோகிலா.

ஸ்ரீமதி காளஹஸ்தி நல்ல நாடகாசிரியை. ஏறக்குறைய முப்பத்தைந்து நாடகங்கள் இயற்றி மேடை ஏற்றியிருக்கிறார். அவற்றில் சில நாட்டிய நாடகங்கள். எனவே கவியும் கூட. அதோடு இசையாற்றலும் மிக்கவர். வீணை வாசிப்பதில் வல்லுநர்.

இன்று இவர் தலைமை ஆசிரியைப் பொறுப்பிலிருந்து ஓய்வு பெற்றுள்ளார் என்றாலும் இவரது மேற்பார்வையில் மொத்தம் நான்கு நிறுவனங்கள் இருக்கின்றன. 'தேவி ஹோம்' என்னும் பெயரில் இயங்கி வரும் விடுதியில் இப்பள்ளியில் பயிற்சி பெறும் பெண்களின் குழந்தைகள் பராமரிக்கப்படுகின்றன. உழைக்கும் பெண்களுக்கென்று ஒரு விடுதி. மாடல் பள்ளி, பயிற்சிப் பள்ளி ஆகியவற்றைக் கண்காணிக்கும் சிறப்புப் பொறுப்பைத் தற்சமயம் ஏற்றிருக்கிறார். கௌரவப் பதவியானாலும், காலையிலிருந்து மாலைவரை உத்தியோகம் பார்ப்பவரைப் போலவே கண்காணித்து வருகிறார்.

இந்தப் பணிகளைத் தமது மூச்சாக, வாழ்வாகக் கொண்ட இவரைக் கௌரவிக்க வேண்டி, செப்டம்பர் மாதம் பன்னிரண்டாம் தேதி கல்வி இயக்குனர் திரு. சிட்டிபாபுவின் தலைமையில் பாராட்டு விழா ஒன்று நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள். இவர் பெயரால் ஒரு நிதியும் சேர்க்கத் தலைப்பட்டுள்ளார்கள். இந்த நிதிக்குப் பழைய மாணவிகள் மட்டுமின்றிப் பலரும் உவந்து நிதியளிக்கலாம். பழைய மாணவிகள் தாங்கள் பயின்ற ஆண்டைக் குறித்து அனுப்புதல் நலம். இந்த நிதியிலிருந்து கிடைக்கும் வட்டித் தொகை, இவர் பெயரால் மாணவிகளுக்கு உபகாரச் சம்பளமாக வழங்கப்பட விருக்கிறது. நிதி அனுப்ப விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்:

திருமதி மோ. வே. ஜயலக்ஷ்மி, தலைமை ஆசிரியை, ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் சாரதா வித்யாலய ஆசிரியப் பயிற்சிப் பள்ளி, 6, பர்கிட் ரோடு, சென்னை-17.

— அனுசுயம்

# இவர் பாராட்டுக்குரியவர்

பொதுவாகப் படித்துப் பட்டம் பெற்றோர், அதுவும் உத்தியோகங்களில் அமர்ந்துள்ளோர் தாங்கள் பிறந்து வளர்ந்த மண்ணைப் பற்றியோ கிராமத்தைப் பற்றியோ சிந்திக்கவோ செயலாற்றவோ அவகாசமின்றி, வாய்ப்பின்றி எங்கெங்கோ தங்கள் பிழைப்புப் பணியில் ஈடுபடுகின்றனர். ஆனால் இதற்கு விதிவிலக்காக எங்கள் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பொறி இயற் பட்டதாரியின் இதயம் சதா எங்கள் கிராமத்து மண்ணைப் பொலிவுறச் செய்வதில் — கிராமத்தாரின் வாழ்வில் மறுமலர்ச்சியை ஊட்டுவதில் ஈடுபட்ட வண்ணம் உள்ளது. ''துரைராஜ்'' எனக் கிராமத்தார் அன்புடன் அழைக்கும் திரு வி. இராமசாமி, பி.ஈ. அவர்கள் இன்று மட்டுமல்ல, தாம் பள்ளியில், கல்லூரியில், கல்வி பயிலும் காலத்திலேயே விடுமுறை நாட்களில் கிராமத்துக்கு வந்துவிட்டால் போதும், ஊரில் உள்ள சாக்கடைகள் துப்புரவு, கிராமக் கிணறுகளைச் சுற்றித் தேங்கியுள்ள அசுத்தங்களை அகற்றுதல், பத்திரிகைகளை வாங்கிப் போட்டு வாசகசாலை போன்றவற்றை ஏற்படுத்துதல் — போன்ற இன்னும் பல பயனுள்ள பணிகளில் ஈடுபடுவார்.

இன்று அவர் பொதுப் பணித் துறை உதவிப் பொறியாளராக எங்கெங்கோ பல பகுதிகளில் பணியாற்ற நேரினும் தம் கிராமத்தை மட்டும் என்றும் மறந்தாரில்லை. தாயைத் தேடி வரும் சேயைப் போன்று அவ்வப்போது தம் கிராமத்தை நாடி ஆவலுடன் வருவார். அவரால் கிராமம் அடைந்த பயன்கள் பலவாயினும் இங்கு அவரது இரு பெரும் சாதனைகளை மட்டும் விளக்குவது அவசியமாகும்.

பசுமைப் புரட்சி, பசுமைப் புரட்சி என்றெல்லாம் வாயாலேயே பசுமைப் புரட்சியைச் செய்து வருகின்றனர் இன்று. ஆனால் நீர்ப்பாசன வசதியற்ற எங்கள் கிராம மானப்பாரி நிலங்களில் அந்தப் பசுமைப் புரட்சியைச் செயல்படுத்திக் காட்டிய அவரது சாதனை பெரிதும் வியக்கத் தக்கதாகும். இப் பசுமைப் புரட்சிக்கு முதலில் தமது சொந்த நிலங்களையே சோதனைக் களனாக்கிக் கொண்டார். எங்கள் ஊருக்குச் சற்றுத் தூரத்தே ஓர் ஆறு ஓடுகிறது. அதாவது மழைக் காலத்தில் சில சமயங்களில் தவிர மற்றப் பெரும்பாலான காலத்தில் மணல்தான் ஓடிக் கொண்டிருக்கும். எனவே நீர்ப்பாசன வசதிக்குச் சிறிதும் பயனற்றது இந்த ஆறு. ஆனால் இவ்வறண்ட ஆற்றின் அடிப் பகுதியிலுள்ள நீரை வெளிக் கொணர்ந்து ஆயிரக் கணக்கான அடி தூரத்துக்குக் குழாய்கள் மூலம் நீரை நிலங்களுக்குப் பாய்ச்சுவதே அவரது திட்டம். அவரது பொறியியல் அறிவும் அனுபவமும் இத் திட்டத்துக்குக் கைகொடுத்து உதவின. பல சிரமங்களுக்கிடையே — நெருக்கடிகளுக்கிடையே இறுதியில் அவரது நன்முயற்சி வெற்றி பெற்றது. அன்று பகீரதன் ஆகாய கங்கையைப் பூவுலகுக்குக் கொணர்ந்தது போல இவரும் பாதாள கங்கையை (ஆற்றின் அடிப் பகுதியிலுள்ள நீரை) வெளிக் கொணர்ந்து வறண்ட நிலத்தில் பாயும்படி செய்து இன்று பசுமைப் புரட்சியையும் சாதித்து விட்டார். ஆம், வெறும் மணல் வெளிகளும் முட்புதர்ச் செடிகளுமே கொண்ட பாழ் நிலங்களில் இன்று சர்க்கரை வள்ளிக் கிழங்குக் கொடிகளின் பசுமை ஒருபுறமும், நெற்பயிரும், மிளகாய்ச் செடி, உகண்டான் பருத்தி, நிலக்கடலை, காய்கறி போன்ற பலவகைப் பயிர்களும் செழுமையுடன் காட்சி யளிக்கின்றன. பச்சைக் 'கூலிங்கிளாஸ்' அணியாமலே கண்ணுக்கினிய பசுமைக் காட்சியைக் காணலாம் கடுங் கோடையிலும் கூட! அவரது நிலங்கள் மட்டுமின்றிப் படிப்படியாகப் பக்கத்து நிலங்களும் பல ஏக்கர்கள் பயனடைந்து வருகின்றன. இது அவர் செய்த பசுமைப் புரட்சி.



அடுத்து அவரது அயராத முயற்சியால் கிராமக் குடிநீர்த் திட்டம் வெற்றி பெற்றதைக் குறிப்பிடலாம். கிராமக் கிணற்று நீர் உவர் நீராதலின் குடிநீருக்காகத் தொலைவில் உள்ள ஆற்றுக்குச்சென்று ஊற்றுத் தோண்டிக் குடங்களில் சுமந்து வருவர். குடிநீருக்காகத் தலைமுறை தலைமுறையாக இப்படி அவதிப்பட்டு வந்தனர் எங்கள் கிராமவாசிகள். அதற்கும் ஒரு விமோசனம் பிறந்தது. இவரது தீவிர முயற்சியால் வறண்ட ஆற்றின் மத்தியில் பெரிய கிணறு ஒன்று தோண்டி அதிலிருந்து நீண்ட தொலைக்குக் குழாய்கள் மூலம் நீரை ஊருக்குக் கொணர்ந்து பெரிய நீர்த் தொட்டி (Water Tank) யில் தேக்கிப் பயன்படுத்துவதே அத்திட்டம். அரசாங்கத்தின் எவ்விதப் பொருளுதவியும் இன்றியே கிராமத்தாரின் ஒத்துழைப்புடன் இத்திட்டம் நிறைவேற்றப்பட்டது. ஆகவே, நெல்லை மாவட்டம் அச்சங்குளம் கிராமவாசிகள் சார்பாக இவரைப் பாராட்டுகிறேன். **இரா. இராமசாமி**



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் ஐம்பத்தொன்று

## மணிமேகலை கேட்ட வரம்

சித்தப் பிரமை கொண்டவளைப் போல் அப்படியும் இப்படியும் பார்த்துத் திருதிரு வென்று விழித்துக் கொண்டு மணிமேகலை உள்ளே வந்தாள். வானதி கூறியதைப் போல் அவளுடைய தோற்றம் பார்க்கப் பரிதாபமா யிருந்தது. அழுது அழுது அவளுடைய முகமும் கண்ணிமைகளும் வீங்கிப் போயிருந்தன.

ஆயினும் எக்காரணத்தினாலோ குந்தவைக்கு அவள் மீது இரக்கம் உண்டாகவில்லை. சமீப காலத்தில் சோழ குலத்துக்கு ஏற்பட்ட விபத்துகளுக்கெல்லாம் கடம்பூர் சம்புவரையர் மாளிகையிலே நடந்த சதியாலோசனைதான் ஆதி காரணம் என்பதை அவளால் மறக்க முடியவில்லை. கடைசியாக, வீராதி வீரனான தன் தமையன் கரிகாலன் அவளுடைய வீட்டிலேதான் கொலையுண்டு மாண்டான் என்னும் எண்ணமும் அவளுக்கு ஆத்திரம் மூட்டிக் கொண்டிருந்தது.

சட்டென்று, இன்னொரு விஷயம் ஞாபகம் வந்தது. இவளுடைய தமையன் கந்தமாறனும் வாணர் குலத்து வீரரும் பழைய சிநேகிதர்கள். அந்தச் சிநேகத்தை முன்னிட்டுத்தான் வந்தியத்தேவர் கடம்பூர் மாளிகைக்குச் சென்றிருந்தார். அங்கே நடந்த சதியாலோசனையைப் பற்றி அறிந்து வந்து சொன்னார். கந்தமாறன் தன் சகோதரியை வல்லத்து இளவரசருக்கு மணம் செய்து கொடுக்கும் உத்தேசமும் ஒரு காலத்தில் கொண்டிருந்தான். அந்தப் பெண் இவளாகத்தான் இருக்க வேண்டும்!....

இந்தச் செய்தி நினைவு வந்ததும் குந்தவைக்கு மணிமேகலையின் மீது ஒரு புதிய சிரத்தை உண்டாயிற்று. ஆகா! இவள் எதற்காகத் தன்னைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறான்? தந்தைக்காகவும் தமையனுக்காகவும் முறையிடுவதற்கு வந்திருக்கிறாளா? சம்புவரையர் மாளிகைக்குத் தன் தமையன் கரிகாலனை அழைத்த போது, அவனுக்கு இப்பெண்ணை மணம் செய்து கொடுக்கும் பிரஸ்தாபமும் செய்யப்பட்டது. கரிகாலனிடம் ஒரு வேளை இந்தப் பேதைப் பெண் தன் உள்ளத்தைச் செலுத்தியிருப்பாளா? தான் மணக்க நினைத்தவன் அகால மரணம் அடைந்ததால் இவள் சித்தம் கலங்கி விட்டதா? அதைப் பற்றி ஏதேனும் சொல்ல வந்திருக்கிறாளா? அல்லது... அல்லது.... ஒரு வேளை அப்படியும் இருக்கக் கூடுமா? கந்தமாறன் தன் சிநேகிதனைப் பற்றி இவளிடம் சொல்லித்தான் இருக்க வேண்டும். வந்தியத்தேவர் இவள் வீட்டில் தங்கியிருந்திருக்கிறார். முன்னால் ஒரு தடவை இருந்திருக்கிறார். இப்போது அதிக நாட்கள் தங்கி இருந்திருக்கிறார். இவள் மனம் ஒரு வேளை வந்தியத் தேவரிடம் ஈடுபட்டிருக்குமோ? அப்படியானால், அவர் இவளை நிராகரித்திருப்பார் என்பதில் ஐயமில்லை. அதற்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு இல்லாத பொல்லாத பழிகளையெல்லாம் அவர் மீது சுமத்த வந்திருக்கிறாளா?....

இவ்வளவு எண்ணங்களும் அதி விரைவாகக் குந்தவையின் உள்ளத் திரையில் தோன்றி மறைந்தன.

மணிமேகலையின் நெஞ்சத்தை ஊடுருவி அதில் உள்ளதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறவள் போல் குந்தவை உற்றுப் பார்த்தாள். அந்தப் பார்வையைத் தாங்க முடியாமல் மணிமேகலை தலை குனிந்தாள். அவளுடைய கண்களிலிருந்து இரண்டு கண்ணீர்த் துளிகள் தரையில் சிதறி விழுந்தன.

''பெண்ணே! நீ ஏன் கண்ணீர் விடுகிறாய்? உன் தமையன் இன்னும் உயிரோடுதானே இருக்கிறான்? என் தமையன் அல்லவா உங்கள் மாளிகையில் படுகொலை செய்யப்பட்டு இறந்தான்? அழுதால், நான் அல்லவோ அழ வேண்டும்? ஆனால், என்னைப் பார்! நான்

அழவில்லை; கண்ணீர் விடவும் இல்லை. மறக் குலத்து மாதர்கள் வீர மரணம் அடைந்தவர்களைக் குறித்து அழுவது வழக்கமில்லை!'' என்றாள் குந்தவை.

மணிமேகலை இளையபிராட்டியை நிமிர்ந்து நோக்கி, ''தேவி! என் அண்ணன் வாள் முனையில் இறந்திருந்தால் நானும் அழ மாட்டேன். ஆனால்.... இறந்தவர்.... இறந்தவர்....'' என்று மேலே சொல்லத் தயங்கி விம்மினாள்.

குந்தவை தான் முதலில் சந்தேகித்தது தான் உண்மையாயிருக்க வேண்டும் என்று எண்ணத் தொடங்கினாள். இவள் ஆதித்த கரிகாலரிடம் தன் நெஞ்சைப் பறி கொடுத்திருக்கக் கூடும். அதைச் சொல்லத் தயங்குகிறாள் போலும்! ஐயோ, பாவம்! இப்படியானால் இவளுக்கு ஆறுதல் சொல்ல வேண்டியதுதான். ''பெண்ணே! நெஞ்சைத் திடப்படுத்திக் கொள். மனத்தில் உள்ளதைத் தைரியமாகச் சொல்லு! இறந்து போனவன் உன் தமையன் அல்ல; என் அண்ணன்தான். அதற்காக நீ ஏன் அழ வேண்டும்? ஒருவேளை உங்கள் வீட்டில் விருந்தாளியாக வந்திருந்த போது இப்படியாகி விட்டதே என்று நினைத்து வருந்துகிறாயாக்கும்! அதற்கு நீ என்ன செய்வாய்? வீட்டில் பெரியவர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். பொறுப்பு அவர்களுடையதே....''

''இல்லை, தேவி, இல்லை! பொறுப்பு என்னுடையதுதான்! அதனாலேயே எவ்வளவு அடக்கிப் பார்த்தும் என் துயரத்தை அடக்க முடியவில்லை. என் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவதும் நிற்கவில்லை. இந்தக் கையில் பிடித்த கத்தியினால் அந்த வீராதி வீரரைக் கொன்றேன் என்று எண்ணும்போது என் நெஞ்சம் வெடித்துச் சிதள் சிதளாகிவிடும் போல் இருக்கிறது....''

குந்தவை தேவி திடுக்கிட்டவளாய், ''பெண்ணே! இது என்ன பிதற்று



கிறாய்? உனக்குச் சித்தப் பிரமை பிடித்து விட்டதா?'' என்றாள்.

''இல்லை; இல்லை! எனக்குச் சித்தப் பிரமை இல்லை. பிடித்தால் இனி மேல் தான் பிடிக்க வேண்டும். உண்மையில் நடந்ததையே சொல்கிறேன். ஆதித்த கரிகாலரைக் கொன்றவள் இந்தப் பாதகிதான். தங்களிடம் உண்மையைச் சொல்லித் தக்க தண்டனை பெறுவதற்காகவே வந்தேன்.....''

''சீச்சீ! இது என்ன அவதூறு? வீராதி வீரனுகிய என் தமையன் ஒரு பெண்ணின் கையால் கொலையுண்டதாக என்னை நம்பச் சொல்கிறாயா? இம்மாதிரி சொல்லும்படி உனக்கு யார் கற்பித்துக் கொடுத்தார்கள்?....''

''ஒருவரும் கற்பித்துக் கொடுக்க வில்லை, தேவி! நான் சொல்லுவதை யாரும் நம்பக்கூட மறுக்கிறார்கள். என் தமையனும் தந்தையும்கூட நான் சொல்வதை ஒப்புக் கொள்ளவில்லை...''

''ஏன் வீண் கதை சொல்லுகிறாய்? அவர்கள்தான் உனக்கு இவ்விதம் சொல் லும்படி கற்பித்திருக்க வேண்டும். அல்லது நீயே உன்னுடைய தந்தையை யும் தமையனையும் காப்பாற்றுவதற்காக இப்படிக் கற்பனை செய்து கொண்டு வந்தாய் போலும்!....''

''தேவி! அவர்களை ஏன் நான் காப் பாற்ற முயல வேண்டும்? என் விருப்பத் துக்கு விரோதமாக அவர்கள் என்னை மணம் செய்து கொடுக்கப் பார்த் தார்கள். முதலில், மதுராந்தகத்தேவ ரைக் கட்டிக் கொள் என்றார்கள். பிறகு திடீரென்று ஆதித்த கரிகாலரை அழைத்து வந்து 'இவரைத்தான் நீ மணந்து கொள்ள வேண்டும். மணந்து கொண்டால் சோழ சிங்காதனம் ஏறு வாய்!' என்றார்கள். அப்படி என்னைப் பலி கொடுக்கப் பார்த்தவர்களுக்காக நான் பரிந்து ஏன் வர வேண்டும்? அவர்கள் செய்த குற்றத்தை நான் செய்ததாக ஏன் ஒப்புக் கொள்ள வேண்டும்? இல்லவே இல்லை!'' என்று கூறினுள் மணிமேகலை.

''பெண்ணே! நீ சொல்வது ஒன்றை விட ஒன்று விசித்திரமா யிருக்கிறது. என் தமையன் கரிகாலனை மணந்து கொள்ளும் பாக்கியத்துக்காக எத்தனையோ ராஜாதிராஜர்களின் குமாரிகள் தவங் கிடந்தார்கள். அப்படியிருக்க, உன் தந்தையும் தமையனும் உன்னைப் பலி கொடுக்க விரும்பியதாக நீ சொல்லு வது ஏன்? சோழர் குலத்தில் வாழ்க்கைப் படுதல் அவ்வளவு பயங்கரமான துன்பம் என்று நீ கருதியது ஏன்?''

''தேவி! எனக்குக் கூடப் பிறந்த தமக்கையோ, தங்கையோ, யாரும் இல்லை. தங்களையே என்னுடைய உடன் பிறந்த சகோதரியாக நினைத்துச் சொல் கிறேன்....'' என்றாள் மணிமேகலை.

''என் தமையனைக் கொன்றதாகச் சொல்லுகிறாய்; என்னுடன் சகோதரி உறவு கொண்டாட எப்படித் துணி கிறாய்?'' என்று இளையபிராட்டி சற்றுக் கடுமையாகக் கேட்டாள்.

''எனக்கு அந்த உரிமை உண்டு. தங்கள் சகோதரர் கரிகாலர் என்னைக் கூடப் பிறந்த சகோதரியாக எண்ணி ஞர். அவ்வாறு தம் கைப்பட எழுதியும் இருக்கிறார். அதை நினைக்கும் போது தான் அவரை நான் கொல்லும்படி நேர்ந்தது குறித்து என் உள்ளம் துடிக் கிறது. அதற்குப் பிராயச்சித்தம் என்ன வென்று கேட்பதற்காகவே தங்களிடம் வந்தேன்!'' என்று கூறிவிட்டு மீண்டும் விம்மினாள் மணிமேகலை.

இளையபிராட்டி வானதியிடம் மெது வான குரலில், ''பாவம்! இந்தப் பெண் ணுக்கு உண்மையிலேயே சித்தப் பிரமைதான் போலிருக்கிறது. இந்தச் சமயத்தில் இவளை அழைத்துக் கொண்டு வந்தாயே? திடீரென்று வெறி முற்றி விட்டால் என்ன செய்கிறது?'' என்றாள்.

வானதி, ''அக்கா! எனக்கும் கவலை யாகத்தான் இருக்கிறது. தயவுசெய்து கோபமாகப் பேசாதீர்கள். நல்ல வார்த்தையாகப் பேசி அவளைத் திருப்பி அனுப்பி விடுவோம்!'' என்றாள்.

குந்தவை மணிமேகலையைப் பார்த்து, ''பெண்ணே! நடந்தது நடந்துவிட் டது. எல்லாம் விதியின் செயல்! வருத் தப்படாதே! என்னை உன் தமக்கை யாகவே நீ பாவித்துக் கொள்ளலாம். ஏதோ சொல்ல வேண்டும் என்றாயே? அது என்ன? அல்லது நீ விரும்பினுல் இன்னொரு சமயம் வேண்டுமானுலும் சொல்லிக் கொள்ளலாம்!'' என்றாள்.

''இல்லை, இல்லை; இப்போதே சொல்லி விடுகிறேன். அக்கா! தாங்கள் பெண் ணுய்ப் பிறந்தவர்கள். ஆகையால், நான் சொல்வதைத் தெரிந்து கொள் வீர்கள். புருஷர்களிடம் எவ்வளவு சொன்னுலும் அவர்களால் தெரிந்து கொள்ள முடியாது. ஒரு பெண் தன் உள்ளத்தை ஒருவருக்குக் கொடுத்து விட்டாள் என்று வைத்துக் கொள் ளுங்கள். அப்படிப்பட்டவர் கையில் ஆயுதம் ஒன்றுமின்றி நிராதரவாக இருக்கும் போது, இன்னொருவன் கையில் பெரிய வாளை எடுத்துக் கொண்டு அவரைக் கொல்லப் போகி றான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது அந்தப் பெண் உண்மை யான அன்புள்ளவள் என்றால், என்ன

செய்வாள்? பார்த்துக் கொண்டு சும்மா இருப்பாளா?....''

குந்தவைக்கு உடனே மந்தாகினியின் நினைவு வந்தது. அவளுடைய கண்களில் கண்ணீர் துளித்தது.

''அது எப்படிச் சும்மா பார்த்துக் கொண்டிருப்பாள்? குறுக்கே சென்று தன் உயிரைக் கொடுத்தாவது தன் காதலனுடைய உயிரைக் காப்பாற்ற முயன்றிருப்பாள்!''

இதைக்கேட்ட மணிமேகலை, ''ஆகா! இந்தமாதிரி யோசனை சொல்ல எனக்கு யாரும் இல்லாமற் போய்விட்டார்களே? அந்தப் பாதகி பழுவூர் நந்தினியின் யோசனையைக் கேட்டல்லவா மோசம் போய் விட்டேன்? என்னைத் தன் உடன் பிறந்த சகோதரியாகப் பாவித்து என் காதலருக்கு மணம் செய்து வைக்கவும் எண்ணியிருந்த உத்தமரை இந்தப் பாவியின் கைகளால் கொன்று விட்டேனே?'' என்று சொல்லி விம்மினாள்.

இளையபிராட்டி குந்தவை தேவி திரும்பி வானதியைப் பார்த்து, ''வெறி முற்றிக் கொண்டு வருகிறது!'' என்று மெல்லிய குரலில் கூறினாள்.

பின்னர், மணிமேகலையை நோக்கி, ''பெண்ணே! அழ வேண்டாம்! நடந்தது என்னவென்று சொல்லு! இல்லாவிட்டால், இன்னொரு சமயம் சொல்லுகிறாயா?'' என்றாள்.

''இல்லை, இல்லை. இப்போதே சொல்லி விடுகிறேன், அக்கா! என் தமையன் கந்தமாறன் வெகு காலமாகத் தன் சிநேகிதர் ஒருவரைப் பற்றி எனக்குச் சொல்லி வந்தான். அவர் சில மாதங்களுக்கு முன்னால் ஒரு நாள் கடம்பூரில் உள்ள எங்கள் மாளிகைக்கு வந்தார். அவரைப் பார்த்தவுடனேயே என் நெஞ்சம் 'இவர்தான் என் நாயகர்' என்று தீர்மானித்து விட்டது....''

இளையபிராட்டி குரலில் சிறிது நடுக்கத்துடனேயே, ''அப்படி உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பாக்கியசாலி யார்?'' என்று கேட்டாள்.

''அவரைப் பாக்கியசாலி என்றா சொல்கிறீர்கள்? இல்லை, இல்லை. என் உள்ளம் அவரிடம் சென்றபோது, என் துரதிர்ஷ்டமும் அவரைப் பிடித்துக் கொண்டது. இன்று இந்தத் தஞ்சாவூர்க் கோட்டையின் பாதாளச் சிறையில் அவர் அடைபட்டுக் கிடக்கிறார், அக்கா! பழுவேட்டரையர் வீட்டுப் பெண்கள் சொன்னார்கள். இந்தக் கோட்டையிலுள்ள பாதாளச் சிறை ரொம்பப் பயங்கரமாக இருக்குமாமே? அதற்குள் அடைபட்டவர்கள் திரும்ப உயிரோடு வருவதில்லையாமே?'' என்றாள்.

''அதெல்லாம் பொய், பெண்ணே! நானும் இதோ நிற்கும் வானதியும் பாதாளச் சிறைக்குச் சில காலத்துக்கு முன்புகூடப் போயிருக்கிறோம்....''

''தேவி! நான் பாதாளச் சிறைக்குப் போக முடியுமா? ஒரு தடவை அவரைப் பார்க்க முடியுமா?''

''அவர் யார் என்று நீ இன்னும் சொல்லவில்லை, பெண்ணே!''

''அவர் வாணர் குலத்து இளவரசர்; பெயர் வந்தியத் தேவர்!''

குந்தவையும் வானதியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

வானதி இப்போது குறுக்கிட்டு, ''அவரைப் பற்றி உனக்கு ஏன் இவ்வளவு கவலை? அவருக்கும் உனக்கும் என்ன உறவு?'' என்று கேட்டாள்.

மணிமேகலை வானதியைப் பார்த்து, ''நீ யார் அதைக் கேட்பதற்கு?'' என்று ஆத்திரமாய்க் கூறினாள்.

உடனே தணிவடைந்து, ''கோபித்துக் கொள்ளாதே, அம்மா! நீ கொடும்பாளூர் இளவரசி வானதி அல்லவா? உன்னுடைய பெரிய தகப்பனார் தானே இன்று இக்கோட்டையின் அதிபதியாக இருக்கிறார்? உன் காலில் விழுந்து கேட்டுக்கொள்கிறேன். எனக்கு ஒரு வரம் கொடு! உன் பெரிய தகப்பனார் பெரிய வேளாரிடம் சொல்லி வந்தியத் தேவரைப் பாதாளச் சிறையிலிருந்து விடுதலை செய்! அவருக்குப் பதிலாக என்னைப் பாதாளச் சிறையில் போடச் சொல்லு! இளவரசர் கரிகாலரைக் கொன்ற பாதகி நான்! என் குற்றத்தை நானே ஒப்புக் கொள்ளும் போது, இன்னொருவர் பேரில் குற்றம் சுமத்துவது என்ன நியாயம்?... தேவி! தங்களையும் அடிபணிந்து கேட்டுக் கொள்கிறேன். கொடும்பாளூர் பெரிய வேளார் நியாயம் செய்யா விட்டால், தங்கள் தந்தை சக்கரவர்த்தியிடம் நேரில் முறையிட்டுக் கொள்ள விரும்புகிறேன். அதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும்'' என்றாள் மணிமேகலை.

குந்தவையின் உள்ளம் பல உணர்ச்சிகளால் அலைகடல் போலக் கொந்தளித்தது. வந்தியத்தேவரைப் பாதாளச் சிறையில் போய்ப் பார்ப்பதற்குக் கூட அவள் தயங்கிக் கொண்டிருந்தாள். இந்தப் பெண்ணோ வந்தியத்தேவரிடம் கொண்ட காதல் நிமித்தமாகக் கொலைக் குற்றத்தையே ஒப்புக் கொள்ள முன் வந்திருக்கிறாள்.

ஆனால் இவள் கூறுவதில் எவ்வளவு உண்மை? எவ்வளவு கற்பனை? காதலனைக் காப்பாற்றுவதற்காக இப்படிக் கற்பனை செய்து கூறுகிறாளா? ஒருவேளை நந்தினியின் துர்ப் போதனையைப் பற்றிக் கூறினளே, அதனால் மதிமயங்கி இவளே அக்கொடிய செயலைச் செய்திருக்கவும் கூடுமா ?

இல்லை, இல்லை; இவளால் அந்தப் பாதகத்தைச் செய்திருக்க முடியாது. வந்தியத் தேவரைக் கொலைக் குற்றத்திலிருந்து தப்புவிப்பதற்கே இவ்விதம் சொல்லுகிறாள். இவள் பேசும் விதத்திலிருந்தே இது நன்கு தெரிகிறது. இவள் பேச்சை யாரும் நம்ப மாட்டார்கள். இவள் பேச்சை நம்பி வந்தியத்தேவரை விடுதலை செய்யவும் மாட்டார்கள்.

ஆனாலும், இவளிடமிருந்து இன்னும் ஏதேனும் தெரிந்து கொள்ள முடியுமா என்று பார்க்க வேண்டும். கரிகாலனுடைய அகால மரணத்தில் ஏதோ மர்மம் இருக்கிறது என்பது நிச்சயம். அதை இந்தப் பெண்ணின் மூலமாக வெளிப்படுத்த முடியுமா ?

''மணிமேகலை! உன் நெஞ்சின் உறுதியைப் பாராட்டுகிறேன். உன் காதலனைக் காப்பாற்றும் பொருட்டு நீ உன்னுடைய குற்றத்தை ஒப்புக் கொள்ள முன் வந்ததைப் பாராட்டுகிறேன். இம்மாதிரி அரிய செயல்களைக் கதைகளிலும் காவியங்களிலும்தான் கேள்விப்பட்டிருக்கிறோம். உன்னைப் பற்றிக் கவி பாடுவதற்குச் சங்கப் புலவர் யாரும் இந்த நாளில் இல்லாமற் போய்விட்டார்கள். ஆனால் உன் வார்த்தையை நான் நம்பினாலும், மற்றவர்கள் நம்ப வேண்டுமே? கரிகாலனுடைய உயிரற்ற உடம்புக்குப் பக்கத்தில் வந்தியத் தேவர் இருந்ததாக உன் தந்தையும் தமையனும் சொல்லுகிறார்களே? அவர்கள் பேச்சை நம்புவார்களா? உன் வார்த்தையை நம்புவார்களா? உன் வார்த்தையை நம்புவதற்கு இன்னொரு தடையும் இருக்கிறது. வல்லத்து இளவரசரை நான்தான் அவசரமாக என் தமையனிடம் அனுப்பினேன். கடம்பூருக்குப் போகாமல் தடுத்து விடும்படி சொல்லி அனுப்பினேன். அப்படிப் போனாலும், கரிகாலனை விட்டு ஒரு கணமும் பிரியாமலிருந்து அவனுக்குப் பாதுகாப்பாயிருக்க வேண்டும் என்று சொல்லி அனுப்பினேன். அன்றியும் கரிகாலனின் மெய் காவற்படையைச் சேர்ந்தவர் வல்லத்து இளவரசர். கரிகாலன் மரணமடையும் போது இவர் அருகில் இருந்திருக்கிறார். அப்படியிருந்தும் அவனைக் காப்பாற்ற வில்லை. ஆகையினால் கடமையில் தவறிவிட்டவராகிறார். தம் உயிரைக் கொடுத்தாவது கரிகாலனுடைய உயிரை இவர் காப்பாற்றி யிருக்க வேண்டும். இவரே கொல்ல வில்லை என்று ஏற்பட்டாலும், கடமையில் தவறியதற்குத் தக்க தண்டனை உண்டல்லவா ?''

''தேவி ! அவர் தமது கடமையில் சிறிதும் தவறவில்லை.''

''அதற்கு உன் வார்த்தையைத் தவிர வேறு என்ன அத்தாட்சி இருக்கிறது?''

''இதோ அத்தாட்சி இருக்கிறது ! தங்கள் தமையனாரின் எழுத்து மூலமான அத்தாட்சியே இருக்கிறது !'' என்று கூறிக் கொண்டே மணிமேகலை தன் இடையில் செருகியிருந்த ஓலை ஒன்றை எடுத்துக் கொடுத்தாள்.

குந்தவை அளவில்லா ஆர்வத்துடன் அந்த ஓலையைப் படித்தாள். ஆம்: ஆதித்த கரிகாலனின் சொந்தக் கையெழுத்துத்தான் அது. வேறு யாருக்கும் தெரியக் கூடாது என்பதற்காக அவனே எழுதியிருக்கிறான். குந்தவைக்குத்தான் முகவரியிட்டு எழுதியுள்ளான்:

''என் அருமைச் சகோதரியார், சக்கரவர்த்தி திருமகளார், இளையபிராட்டியார் குந்தவை தேவிக்கு, ஆதித்த கரிகாலன் எழுதியது.

எத்தனையோ காலமாக எனக்கு இரவில் தூக்கம் கிடையாது. மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு கொடிய பாவம் செய்தேன். சரணாகதி அடைந்த பகைவனைக் கொன்றேன். அவனும் அவனுக்காக உயிர்ப் பிச்சை கேட்டவளும் என்னை வருத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் என்னை நிம்மதியாகத் தூங்க விடுவதில்லை.

இன்று அதிகாலையில் தூக்கமில்லாமல் வெளிவந்த போது வால்நட்சத்திரம் விழுந்து மறைவதைக் கண்டேன். என் உடம்பிலிருந்தும் ஏதோ அச்சமயம் போய் விட்டது. இப்போது வெறும் கூடு மாத்திரமே இருக்கிறது. சகோதரி! இந்தத் துர்நிமித்தம் என்னோடு போகட்டும். நம் அருமைத் தந்தைக்கும் அருள்மொழிக்கும் ஒன்றும் நேராமல் ஏகாம்பர நாதர் காப்பாற்றட்டும்.

நானும் நீயும் நம் இளம் பிராயத்தில் சோழ ராஜ்யத்தின் உன்னதத்தைப் பற்றி எவ்வளவோ கனவு கண்டோம். அவற்றை என்னால் நிறைவேற்றக்கூடவில்லை. என் தம்பி நிறைவேற்றுவான். அவன் மூன்று உலகையும் ஆளப் பிறந்தவன். அவனுக்கு வல்லத்து இளவரசன் வந்தியத்தேவன் துணைவனாகஇருப்பான்.

தேவி! வந்தியத்தேவன் நீ இட்ட பணிகளை நன்கு நிறைவேற்றினான் என்று அறிந்து திருப்தி அடைந்தேன்.

இல்லாவிடில் அவனை இங்கே இவ்வளவு முக்கியமான காரியத்துக்கு அனுப்பி யிருக்க மாட்டாய். என்னை, என் விதியிலிருந்து காப்பாற்ற அனுப்பி யிருக்க மாட்டாய்.

சகோதரி! இங்கே எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால், அதற்கு என் விதி யும் என் பிடிவாதமும்தான் பொறுப்பே தவிர வந்தியத்தேவன் பொறுப்பு அல்ல. நீ சொல்லி அனுப்பியபடி அவன் என்னை இந்தக் கடம்பூர் மாளிகைக்கு வராமல் தடுக்க எவ்வளவோ முயன்ருன். இந்த மாளிகைக்கு வந்த பிறகு நிழலைப் போல் என்னைத் தொடர்ந்து கொண்டிருக்கிருன். அதற்காகவே இந்த வீட்டுப் பெண் மணிமேகலையைச் சிநே கம் பிடித்து வைத்துக் கொண்டிருக் கிருன். அவனுடைய உதவியினால், நான் போக உத்தேசித்திருக்கும் இடத் துக்கு முன்னதாகவே போய் ஒளிந்து கொண்டிருக்கிருன். எல்லாம் என்னைக் காப்பாற்றுவதற்காகத்தான்.

ஆனால் விதியிலிருந்தும் வினை வசத்தி லிருந்தும் ஒருவர் இன்னொருவரைக் காப்பாற்ற முடியுமா?

படம் எடுத்து ஆடும் நாக சர்ப்பத் தின் மோகன சக்தியினால் கவரப்பட்ட சிறிய பிராணிகள் தாங்களே வலியச் சென்று அப்பாம்புக்கு இரையாகி மடி யும் என்று கேள்விப்பட்டிருப்பாய்.

அம்மாதிரியே நானும் நந்தினியிடம் போகிறேன். அவள் நம் சகோதரி என்று எனக்கு எச்சரிக்கை அனுப்பியிருக்கிருய். அதை நம்ப முடியவில்லை. ஆயினும் அவள் விஷயமான மர்மம் ஏதோ ஒன்று இருக்கிறது. அதை அறிந்து கொள்வ தற்கே போகிறேன். எப்படியும் இன்று உண்மையை அறிந்து கொள்வேன்.

என் விதி என்ன ஆனாலும், வந்தியத் தேவன் பேரில் குற்றம் யாதுமில்லை. அவன் உன் கட்டளையைச் சரிவர நிறை வேற்றி வருகிருன். சகோதரி! அந்த மாய மோகினி நந்தினியின் வலையில் கந்தமாறனும், பார்த்திபேந்திரனும் அடியோடு விழுந்து விட்டார்கள். அப் படி விழாமல் தப்பிப் பிழைத்தவன் வந் தியத்தேவன் ஒருவன்தான்.

அவனுக்கு என்ன பரிசு கொடுப்பது என்று எனக்குத் தெரியவில்லை. இந்த வீட்டில் மிகச் சூடிகையான பெண் ஒருத்தி இருக்கிருள். என் உடன் பிறந்த சகோதரியைப் போல் அவள் பேரில் எனக்குப் பிரியம் உண்டாகி விட்டது. மணிமேகலையை வந்தியத்தேவனுக்குத் திருமணம் செய்வித்தால், அவனுக்கு நல்ல பரிசாக இருக்கும். ஆனால், சகோ தரி, உனக்கு இது சம்மதமாக இருக் குமோ, என்னமோ, தெரியாது.

என் அருமைத் தங்காய்! இந்த ஓலையை அந்தப் பெண்ணிடந்தான் ஒப்பு

## அகலிகைக்கு அனுதாபம்

**யோ**கியாரின் எட்டாம் ஆண்டு நினைவு நாள் 25—7—71 அன்று சென்னை மத்திய நூலகக் கட்டடத்தில் நடைபெற்றது.

காலஞ்சென்ற பாலபாரதி ச. து. சு. யோகியார் அவர்கள் பாடிய ''அகலிகை'' என்ற சிறு காவியத்தில், எந்தக் காலத்திலோ தோன்றி, எந்தக் காலத்திலோ மறைந்து போன அகலிகைக்காக நெஞ்சுருக வாதாடு கிருர். ஒவ்வொரு கவிஞனுக்கும் ஒவ்வொரு பாத்திரத்தின் மேல் உண்டாகும் அநுதாபம் ஒரு காவியமே உருவாவதற்கு வித்தாக அமைந்திருக்கிறது. யோகியாருக்கு அகலிகை யிடம் தோன்றிய பரிவு ''அகலிகை'' என்ற நல்லதொரு சிறு காவியத்தையே உருவாகச் செய்தது. ஸ்ரீ ராமன் அகலிகையின் சார்பில் வாதாடுகையில் அவர் வாயிலாக அழுத்தம் திருத்தமான அற்புதமான கேள்விகளை யோகி யார் கேட்கிருர். அகலிகை ஒரு கண நேர ஏமாற்றத்தில் இந்திர னின் வசமானள்; அவள் கணவர் கௌதம முனிவரின் வடிவிலேயே வந்து இந்திரன் அவளைத் தன்வசப் படுத்திக் கொண்டான். அதுவும் அதிகாலை நேரத்தில், முனிவர் வெளியே போக, இந்திரன் அவர் உருவம்கொண்டு உள்ளே நுழைந்து விட்டான். அந்த இடத்தைக் கவிஞர் சர்வ ஜாக்கிரதையாக, அகலிகைமீது களங்கம் ஏற்படா மல் கூறுகிருர். '' என்றும்



இல்லாப் பேராசை என் கணவர் கொண் டாரே! இன்று கண்டேன் பேரின்பம் கொண் டேன் யான் என்று இணங்கிவிட்டாள்...'' என்று அகலிகை ஏமாந்து போனதை நாசூக் காக வெளிப்படுத்துகிருர்.

அகலிகையும் இந்திரனும் முனிவரால் சபிக்கப்படுகின்றனர். பிறகு ஸ்ரீராமன் அங்கு வந்து அகலிகைக்குச் சாப விமோசனம் தந்து அவளைக் கௌதமர் ஏற்றுக் கொள்ள வேண் டும் என்று வாதாடுகிருன்: ''முக்காலமும் உணர்ந்த முனிவராகிய தங்களாலேயே உண்மையாகவே பொழுது விடிந்துவிட்டதா, இல்லையா என்பதை உணர முடியவில்லை. அப் படியிருக்க, அபலையான அகலிகைக்குத் தன்னை வஞ்சிக்க நினைத்து இந்திரன் உங்கள் உருவில் வந்திருக்கிருன் என்பது எப்படித் தெரிந்திருக்க முடியும்?'' என்று வாதிட்டு அகலிகையின் மாசற்ற தன்மையை நிலைநிறுத்த அவளை ஏற்றுக் கொள்ளச் சொல்லி வற்புறுத்து கிருன்.

இந்த ''அகலிகை'' காவியம் பலராலும் பெரிதும் பாராட்டப் பட்டது. பல ஆண்டுகளுக்கு முன்பு ''லோகோபகாரி''யில் அதன் ஆசிரியரான பரலி சு. நெல்லையப் பர் இது பற்றிக் குறிப்பிட்டு, யோகியாரின் கவித்துவத்தையும், காவிய நயத்தையும் பாராட்டி எழுதியிருக்கிருர்.

—விஜயம்

விக்கப் போகிறேன். நல்ல வேளையாக அவளுக்குப் படிக்கத் தெரியாது. அவளைக் குறித்து உன் விருப்பம் எப்படியோ அப்படிச் செய்! நம் குடும்பத்தில் நீயே மிகச் சிறந்த அறிவாளி. உன் வார்த்தையை நான் தட்டி நடந்தேன். அதன் பலனை அநுபவிக்கப் போகிறேன். தம்பி அருள்மொழியாவது உன் யோசனைப்படி நடந்து சோழ சாம்ராஜ்யத்தை மகோந்நத நிலைக்குக் கொண்டு வருவானாக...''

இந்த இடத்தில் எழுத்து நின்று போயிருந்தது. ஓலையைப் படித்து முடிக்கும்போது குந்தவையின் கண்களிலிருந்து கண்ணீர் சொரிந்தது.

கண்களைச் சட்டென்று துடைத்துக் கொண்டு மணிமேகலையைப் பார்த்து, ''பெண்ணே! இந்த ஓலை உன்னிடம் எப்படி வந்தது? யார் கொடுத்தார்கள்?'' என்று கேட்டாள்.

''தேவி! இளவரசரே என்னிடம் கொடுத்தார். அவரைப் பற்றி நந்தினி என்னவெல்லாமோ தவறாகச் சொல்லியிருந்தாள். ஆகையால் எனக்குத்தான், காதல் ஓலை எழுதியிருக்கிறார் என்று முதலில் நினைத்துக் கொண்டேன். இதைத் தீயில் போட்டுப் பொசுக்கிவிட எண்ணினேன். பிறகு, என்னதான் எழுதியிருக்கிறார் என்று பார்க்கலாம் என்று நினைத்துப் பத்திரப்படுத்தி வைத்தேன். என் தோழி சந்திரமதியிடம் கொடுத்துப் படித்துக் காட்டச் சொன்னேன். என்னைத் தம் உடன் பிறந்த சகோதரி என்று எழுதியிருக்கும் வீரபுருஷரை இந்தக் கைகளினால் கொன்று விட்டேன் என்று எண்ணும்போது என் நெஞ்சு துடிக்கிறது. தேவி! படுகொலை செய்த பாதகிக்கு என்ன தண்டனை உண்டோ அதை எனக்குக் கொடுக்கும்படி செய்யுங்கள்!'' என்று வேண்டினாள் மணிமேகலை.

அவளுடைய பரபரப்பும், அவள் பேசிய விதமும், அவள் இதைக் கற்பனை செய்து சொல்லுகிறாள், வந்தியத் தேவரைக் காப்பாற்றுவதற்காகச் சொல்லுகிறாள் என்பதை நன்கு வெளிப்படுத்தின. குந்தவை அதை அறிந்து கொண்டாள். ஆயினும் அவள் கொண்டு வந்த ஓலை கற்பனை அல்ல. அது கரிகாலரின் சொந்த எழுத்து. வந்தியத்தேவரைச் சிறை மீட்கவும் பயங்கரமான கொலைக் குற்றம் அவர் மீது சாராமல் தடுக்கவும் இந்த ஓலையே போதும். இந்தப் பெண் வாயை மூடிக் கொண்டிருந்தால் ரொம்ப அநுகூலமாயிருக்கும். ஆனால் எப்படி இப்பெண்ணைச் சும்மா இருக்கப் பண்ணுவது?

''மணிமேகலை! இன்னமும் கரிகாலரை நீதான் கொன்றதாகச் சாதிக்கிறாயா?'' என்று கேட்டாள்.

''ஆம், தேவி!''

''இந்த ஓலையைப் படிக்கச் சொல்லிக் கேட்டதாகச் சொல்கிறாய். இதில் உன்னை உடன்பிறந்த சகோதரி என்று கரிகாலன் குறிப்பிட்டிருக்கிறான். அவ்வளவு உன் மேல் பிரியம் வைத்திருந்தவனை நீ எதற்காகக் கொல்ல வேண்டும்?''

''ஓலையை முன்னதாகப் படித்திருந்தால் அந்தப் பயங்கரமான காரியத்தைச் செய்திருக்க மாட்டேன். அவருடைய மனத்தை அறியாமல் செய்துவிட்டேன். அந்த வஞ்சகி நந்தினியும் என் மனத்தைக் கெடுத்து வைத்திருந்தாள்.''

''எந்தவிதத்தில் கெடுத்திருந்தாள்?''

''வந்தியத் தேவர் மீது கரிகாலர் துவேஷம் கொண்டிருப்பதாகவும், அவரைக் கொன்றாலும் கொன்று விடுவார் என்றும் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள். அதற்குத் தகுந்தாற்போல் கரிகாலரும் கையில் வாளைத் தூக்கிக் கொண்டு, 'எங்கே அந்த வந்தியத்தேவன்? அவனை இதோ கொன்றுவிடுகிறேன்!' என்று கூத்தாடவே, நான் உண்மையென்று நம்பி விட்டேன். உடனே என் கையிலிருந்த கத்தியினால்......''

''பெண்ணே! இந்தப் பேச்சை விட்டு விடு. வீராதி வீரனாகிய ஆதித்த கரிகாலனை ஓர் அபலைப் பெண் கொன்றாள் என்பதை நான் நம்பினாலும் உலகம் நம்பவே நம்பாது.''

''தேவி! வேறு யார் கொன்றிருக்க முடியும்? கரிகாலருடைய உடல் கிடந்த இருட்டறையில் வந்தியத் தேவரும் நானும் மட்டுமே இருந்தோம். அவர் கொல்லவில்லை. பின்னே, நான்தானே கொன்றிருக்க வேண்டும்?''

''நீ இப்படிச் சொல்வதினால் இறந்து போன என் தமையனுக்கு அபகீர்த்தி உண்டாக்குகிறாய். மேலும் இன்னொன்று யோசித்துப் பார்! வாணர் குலத்து இளவரசர் நீ கொலைக் குற்றம் செய்தாய் என்பதை ஒப்புக் கொண்டு சும்மா இருப்பாரா? நீ அவரைக் காப்பாற்ற விரும்புவது போல் அவர் உன்னைக் காப்பாற்ற விரும்ப மாட்டாரா? நீ பிடிவாதமாகச் சொல்வது போல் அவரும் 'நான்தான் கொன்றேன்' என்பார். நீ ஒரு பெண் என்பதற்காக உன்னை ஒருவேளை மன்னித்து விடுவார்கள். அவரை மன்னிக்கமாட்டார்கள். இராஜ குலத்தினரைக் கொன்ற துரோகிகளுக்கு எவ்வளவு பயங்கரமான தண்டனை விதிக்கப்படும் என்று உனக்குத் தெரியும் அல்லவா? நாற்சந்தியில் நிறுத்தி வைத்து....''

இதைக் கேட்ட மணிமேகலை 'ஓ' வென்று அழுது விட்டாள். தேம்பி அழுதுகொண்டே, ''அக்கா! தாங்கள் தான் அவரைக் காப்பாற்ற வேண்டும்!'' என்று கதறினாள். (தொடரும்)

# சில மனிதர்கள் சில நினைவுகள்

கம்பராமாயணத்தில் வரும்,

மறைகளே மறைந்து போய் வனத்துள் வருவான்

என்ற அடிக்கு வேதங்களால் அறியப்படாதவனை பரம்பொருள் இராமாவதாரம் எடுத்து நாட்டைத் துறந்து காட்டுக்குப் போனான் என்பதுதான் சாதாரண சம்பிரதாய அர்த்தம். ஆனால் ரசிகமணி டி. கே. சி. இந்த அடிக்கான பொருளைக் கீழ்க் கண்டவாறு ஒரு சந்தர்ப்பத்தில் விளக்கினார்.

''ரிஷிகளும் முனிவர்களும் வேத நூல்களில் கடவுளுடைய தத்துவத்தை எடுத்துக் கூறி யிருக்கிறார்கள். அந்த வேத நூல்களைப் படித்து அர்த்தம் செய்வது அவ்வளவு சுலபமல்ல. படித்து அர்த்தம் தெரிந்தவுடனே, 'ஆஹா! எனக்கல்லவா இதன் பொருள் தெரிந்து விட்டது' என்ற ஆணவம் உண்டாகிறது. ஆணவம் தோன்றிய இடத்திலிருந்து பகவான் உடனே மறைந்து விடுகிறார். ஆனால் காட்டுக்குள் போய்விட்டால் 'நான் செய்தேன்' என்ற ஆணவ உணர்ச்சிக்கே இடமில்லாமல் போகிறது. வனத்துக்குள்ளே இருக்கும் மலைகள் விருட்சங்கள் செடி கொடிகள் அருவி எல்லாம், 'நான் செய்தேன்' என்ற உணர்ச்சிக்குச் சிறிதும் இடமின்றிக் கடவுளின் செயலையே நினைவூட்டுகின்றன. எனவே, காட்டுக்குள்ளே தான் மனிதனுடைய ஆணவம் அடியோடு மறைந்து இறைவனது பெருமையை நன்கு உணர முடிகிறது.''



டி. கே. சி.

□

வி. கே. கிருஷ்ணமேனன் லண்டனில் ஹைகமிஷனராக இருந்த நேரம். அப்போது ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் வாஷிங்டனில் இந்தியத் தூதுவர். கிருஷ்ண மேனனுக்கும் ஸ்ரீமதி பண்டிட்டுக்கும் அவ்வளவு சுமுகமான உறவு இல்லை. ஒரு சமயம் ஸ்ரீமதி பண்டிட் வாஷிங்டனிலிருந்து இந்தியாவுக்கு வரும் வழியில் இருபத்து நான்கு மணி நேரம் லண்டனில் தங்க வேண்டியிருந்தது. லண்டனில் மேனனைப் பிடிக்காத இந்தியர்கள் பலர் உண்டு. அவர்கள் ஸ்ரீமதி பண்டிட்டைச் சந்தித்தால், மேனனுக்கு எதிராக உருவாகும் அபிப்பிராயங்களை அவர் அன்றைய பாரதப் பிரதமரான நேருவிடம் எடுத்துச் சொல்லிவிடுவார் என்று மேனன் அஞ்சினார். அதைத் தவிர்க்கவும் திட்டமிட்டார். இது தெரியாமல் தம்மை லண்டனில் சந்திக்க விரும்பி எழுதியிருந்த பல இந்தியர்களின் கடிதங்களை, சந்திப்பு ஏற்பாடுகளுக்காக மேனனுக்கே அனுப்பி வைத்திருந்தார் ஸ்ரீமதி பண்டிட்.



கிருஷ்ணமேனன்

மேனன் அவருடைய அந்தரங்க ஆலோசகர்களுடன் அவசரம் அவசரமாக யோசனைகள் நடத்தினார். பிரிட்டிஷ் மந்திரிகள் சிலருக்கு ஸ்ரீமதி பண்டிட் அவர்களைச் சந்தித்துப் பேச விரும்புவதாக இவரே சொல்லிச் சில நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்தார். இப்படியாகக் கிட்டத்தட்ட இருபத்தி நான்குமணி நேரத்தில் திட்டங்களை வகுத்தார். கடிதம் எழுதியவர்களை ஸ்ரீமதி பண்டிட் சந்திக்க அவகாசம் இல்லாமலும் பார்த்துக் கொண்டார். லண்டன் ஹீத்ரோ விமான தளத்தில் வாஷிங்டனிலிருந்து வந்து இறங்கும் விமானத்துக்கு அருகிலேயே காரைக் கொண்டு போக விசேஷ அனுமதி பெற்று ஸ்ரீமதி பண்டிட்டை அங்கேயே காரில் ஏற்றி ஊருக்குள் வேகமாக அழைத்துப் போய் விட்டார். இதனால் மேனனுக்கு எதிராகக் கோஷமிட்டுக் கொண்டு விமான தள பிரதான வாயிலில் காத்திருந்த பல இந்தியர்களைக் கவனிக்கக்கூட ஸ்ரீமதி பண்டிட்டுக்கு வாய்ப்பில்லாமல் போய்விட்டது. அன்று முழுவதும் அவருக்குத் தொடர்ந்து பல நிகழ்ச்சிகள். பின்னிரவில் கூட ஒரு நாடக நிகழ்ச்சி.



ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட்

மறுநாட்காலையில் அவர் தூக்கம் கலையுமுன்பே அவரை எழுப்பி இந்தியா போகும் விமானத்தில் ஏற்றி அனுப்பி விட்டார்.

இந்தியாவுக்கு வந்து சேர்ந்த பிறகுதான் ஸ்ரீமதி பண்டிட்டுக்கு மேனனின் தந்திரம் தெரிந்தது. அவரைச் சந்திக்க முடியாமல் ஏமாந்த பல இந்தியர்கள் அவருக்குக் கடிதம் எழுதியிருந்தார்கள்.

-மேனு

# சுழிக்காற்று

**கௌசிகன்**

## அத்தியாயம் 23

மஞ்சுளா நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். தன் மீது சாய்ந்தபடி தூங்கும் அந்த மென்னுடலை அப்படியே தன் இரு கைகளாலும் தூக்கிக் கொண்டு எழுந்தான் சேகர். அவளது படுக்கை அறையைத் திறக்கும்படி பார்வையால் கோபாலுக்குக் கட்டளையிட்டான். இப்போது கோபாலுக்கு எல்லாம் புரிந்து விட்டது. இது சேகர் திட்டமிட்டுச் செய்த செயல் என்று. வேகமாக மஞ்சுளாவின் படுக்கை அறைக் கதவைத் திறந்து விட்டான். சேகர் அவளைப் படுக்கையில் கிடத்தி அருகே ஆதரவாக இரு பக்கமும் தலையணைகளை வைத்துப் போர்வையால் மார்புவரை மூடிவிட்டு வெளியே வந்தான். மறக்காமல் ஓசையின்றி அந்தக் கதவைச் சாத்தினான்.

''இன்னும் குறைந்தது ஐந்து மணி நேரமாவது அவள் அயர்ந்து உறங்குவாள், கவலையில்லை'' என்றான் சேகர்.

''அவள் சாப்பிட்ட ஷர்பத்தில்..?'' உறுதிப்படுத்திக் கொள்ள நினைத்தான் கோபால்.

''தூக்க மாத்திரைகளைக் கலந்து இரண்டு கிளாஸ் ஷர்பத் தயாரித்துத் தனிமைப் படுத்திவைத்தேன். நல்லவேளை. எங்கே அசட்டுத்தனமாக நீ ஐந்தே நிமிஷத்தில் உன் முதல் தம்ளரைக் காலி செய்து விட்டு அடுத்த தம்ளருக்குத் தாவி விடுவாயோ என்று பயந்து கொண்டிருந்தேன். உணவோ பானமோ எதுவானாலும் உனக்குத் தனி அளவாயிற்றே!'' என்றான் சேகர் புன்னகையுடன் — மஞ்சுளா பாக்கி வைத்திருந்த பானத்தை வாஷ் பேசினில் கொட்டிக் கொண்டே.

''நான் சுவைத்த பானம் அளவான ருசியாக இருந்தது. மஞ்சுளா தன் பானம் 'ஸ்ட்ராங்' என்றதுமே எனக்கு யோசனை வந்து விட்டது. அதுவும் நீ அவளைப் பானம் பருக ஊக்குவித்தது என்னைச் சிந்தனை செய்ய வைத்துவிட்டது. அதனால்தான் நான் அடுத்த தம்ளருக்குத் தாவவில்லை'' என்றான் கோபால்.

''நல்ல வேளை, என் திட்டத்தைக் காப்பாற்றினாய். நான்காவது கிளாஸ் பானத்தை நீ எடுத்துக் குடித்திருந்தால் நான் உனக்கும் படுக்கை தயார் செய்ய வேண்டியிருந்திருக்கும்'' என்ற சேகர், ''கோபால், இன்று இரவு நாம் தூக்கத்தைத் தியாகம் செய்ய வேண்டியிருக்கும்'' என்றான்.

''நான் அதற்கு என்னை அப்போதே தயார்ப்படுத்திக் கொண்டு விட்டேனே! சொல், என்ன செய்ய வேண்டும்?''

''அசுரத்தனமானதொரு காரியம் செய்தாக வேண்டும் நாம். 'பகலெல்லாம் அப்படிச் செய்ய வேண்டாம் — அவசியமிருக்காது' என்று என் மனத்துக்குச் சமாதானம் செய்து கொண்டிருந்தேன். ஆனால் இப்போது அதைச் செய்தே ஆக வேண்டிய அவசியம்



ஏற்பட்டிருக்கிறது. அந்தக் காரியத்தைச் செய்ய நாம் முற்படும்போது நானும் உடன் வருவேன் என்று மஞ்சுளா பிடிவாதம் பிடிப்பாள். அதற்காகத்தான் அவளை இப்படிப் பலவந்தமாகத் தூங்கச் செய்தேன். இந்த நிலையில் — வேளையில் அவளுக்குத் தூக்கம் அவசியமும் கூட'' என்று கூறியபடியே சேகர் வேப்ப மரத்துப் பங்களாவின் ஜன்னல் கதவுகளெல்லாம் மூடப்பட்டிருக்கிறதா என்று ஊர்ஜிதப்படுத்திக் கொண்டான். பின் பக்கத்துக் கதவை மூடித் தாளிட்டான். வாசல் கதவுகளையும் மூடிப் பூட்டிக் கொண்டு சாவியைத் தன் பாண்ட் பாக்கெட்டில் போட்டுக் கொண்டான். இப்போது இருவரும் வேப்ப மரத்துப்பங்களாவின்வெளியே அதன் நடை பாதையில் நின்று கொண்டிருந்தார்கள்.

''சேகர், மஞ்சுளாவை இப்படித் தனியாக இங்கு வைத்துப் பூட்டிவிட்டு நாம் போவது அத்தனை நல்லதாகப் படவில்லையே?'' என்றான் கோபால்.

''கவலைப்படாதே கோபால். நாம் வெகுதூரம் போகப் போவதில்லை. இங்கு அருகில்தான் இருக்கிறது, நமது வேலை. ஓசையின்றி யாரும் உள்ளே நுழைந்துவிட முடியாது. இந்தப் பங்களா மீது நமது கண்ணும் காதும் இருக்கும். தவிர இங்கு உலாவி வந்த கொலைகாரன் இன்று இரவு தன் கைவரிசையைக் காட்ட மாட்டான் என்று ஓரளவு உறுதியாகச் சொல்லுவேன். ஏனென்றால் அவன் இங்கிருந்து போய்விட்டான்!''

மேக மூட்டத்தினால் வானம் கனத்துக் கிடந்தது. சற்றைக்கொரு தரம் ஒன்பது நாள் வளர்ச்சி பெற்ற நிலவு, தன் பொலிவிழந்த முகத்தை வெளியே நீட்டும். உடனே ஒரு கரு மேகம் கனவேகமாக ஓடிவந்து அதைப் பிடித்து இழுத்துக் கொண்டு உள்ளே ஓடிவிடும். இந்தக்

## ஒரே சலவையில் 3 வழிகளில் செயல் புரிந்து...




# டெட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது

— மற்ற எந்த பவுடரையும்விட.

**இதோ, எப்படி என்று பாருங்கள்:**

1. **டெட்** டிலுள்ள தனிப்பட்ட சக்திவாய்ந்த பொருள் அதி விரைவாகத் துணியில் ஊடுருவிச் சென்று, மறைந்துள்ள அழுக்கைக்கூட நொடியில் விரட்டி அடிக்கிறது. துணிகள் வெண்மையாகின்றன.
2. **டெட்** அழுக்கை வெளிக்கொணர்ந்த பிறகு, அது மீண்டும் படியாமல் தடுக்கிறது. துணிகள் அதிக சுத்தமாகின்றன: சுத்தமாகவே நீடித்து இருக்கின்றன.
3. **டெட்** துணிகளை அதிவெண்மையாக்குகிறது. துணிகள் முன்னைவிட அதிவெண்மையுடன் பளிச்சிடுகின்றன. (நீலம் அல்லது வெண்மைச் சாதனம் சேர்க்கவேண்டிய அவசியமில்லை.)

**இன்றே டெட் வாங்குங்கள்!** ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்ப

SHILPI HPMA 38A/70

கண்ணாமூச்சி விளையாட்டை ரசித்துக் கொண்டே நடந்தார்கள் இருவரும்.

பண்ணையின் ஆயுதப் பட்டறையான 'டூல் ஹவுஸ்'ஸினுள் நுழைந்து ஒரு ஸ்விட்சைப் போட்டான் சேகர். ஒற்றை விளக்கு ஒளி சிந்தியது. அங்கிருந்த நீண்ட கைப்பிடியைக் கொண்ட மண் வாரிப் போடும் 'ஷோவ'லை எடுத்துக் கோபாலின் கையில் கொடுத்தான். தானும் ஒன்றை எடுத்துக் கொண்டான். அவை தவிர உறுதியான கயிற்றுச் சுருணை ஒன்றையும் வாக்கிங் ஸ்டிக் ஏந்திய அவன் கரம் எடுத்துக் கொண்டது. அந்தக் கையில் முன்பே ஒரு டார்ச் விளக்கும் தயாராக இருந்தது. விளக்கை அணைத்து விட்டு, வெளியே வந்தார்கள்.

மேகத்தின் இடுக்கிலிருந்து எட்டிப் பார்த்த நிலவு சிந்திய ஒளியில் தூரத்தில் தெரிந்ததொரு மேட்டை நோக்கித் தன் கைத்தடியை முன்னால் அழுத்தி நடந்தான் சேகர். சட்டென்று நிலவு பதுங்கிக் கொண்டது. இருள் சூழ்ந்து கொண்டது. படபட வென்று பெருந் தூற்றல்; அதைத் தொடர்ந்து பளிச் பளிச்சென்று மின்னல் கொடி விட்டுப் படர்ந்து நெளிந்து ஓடிற்று.

மேட்டில் ஏறி நின்ற சேகர் தன் டார்ச் விளக்கின் பொத்தானை அழுத்தினான். ஒளிக் கீற்றுப் பளீரிட்டுக் கல்லறை நுழைவாயிலின் கதவைத் தாக்கி நின்றது. சேகரின் கால்கள் பண்ணையின் கல்லறைப் பக்கம் அழுத்தமாக நடை போட்டன. கோபால் மௌனமாக நண்பனைப் பின்தொடர்ந்தான். சிறிது நேரத்தில் இருவரும் அன்று காலைதான் அடக்கம் செய்யப்பட்ட கந்தசாமி அவர்களின் கல்லறையின் அருகில் போய் நின்றார்கள். அந்தச் சமாதியின் மீது மலர்கள் சிதறிக் கிடந்தன. சேகர் குனிந்து அந்த மலர்களையும் மாலைகளையும் ஒரு கையினால் ஒதுக்கித் தள்ளினான்.

''கோபால் ...... ம் ..... மண்ணைத் தோண்டி அப்புறப்படுத்து'' என்றான்.

ஒரு விநாடி கோபால் ஏதும் பேசவில்லை. ஆனால் அவன் பார்வை நண்பனின் மீது நிலைத்திருந்தது. சேகரோ தன் டார்ச்சினால் கல்லறையின் மேலாகத் தழைந்திருந்த ஒரு பெரிய மரத்தின் கிளையை ஆராய்ந்து கொண்டிருந்தான்.

''எதற்காகத் தோண்டச் சொல்கிறாய்?'' என்று கோபால் கேட்டான்.

''காரண காரியங்களைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருக்க இப்பொழுது நேரமில்லை. விரைவில் வேலையை முடிக்காவிட்டால் நாம் இருவரும் மழையில் தெப்பலாக் நனைந்து போக வேண்டியிருக்கும்'' என்றான் சேகர். பெருந் தூற்றல் இப்போது ஊசியாக உருமாறிப் பறந்துகொண்டிருந்தது, பெருமழைக்கு முன்னோடியாக.

மலர் வாரியைக் கல்லறை மேட்டில் பதித்து அழுத்தினான் கோபால். கெட்டிப்படாத தரை, தோண்டுவது சிரமமாக இல்லை. அந்தச் சமயம் சேகர் கயிற்றை மரக் கிளையில் வீசி இழுத்துத் தயார் செய்து கொண்டிருந்தான்.

''காலையில்தானே இங்கு மஞ்சுவின் தந்தை கந்தசாமியைப் புதைத்து அடக்கம் செய்தார்கள்.'' கோபாலின் வாய் பேசினாலும் கை வேலை செய்து கொண்டிருந்தது.

''உண்மைதான் கோபால். மஞ்சுளாவுக்கு நான் தூக்க மாத்திரை கொடுத்துத் தூங்கச் செய்து விட்டு வந்ததற்கான ஒரு முக்கிய காரணம் என்ன என்பது புரிந்திருக்குமே உனக்கு? இப்படியொரு காரியம் — புதைத்தவரை மறுபடியும் தோண்டி எடுப்பது என் மனத்துக்கும் கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆனால் இதை நாம் செய்துதான் ஆக வேண்டும். வேறு வழியில்லை. விரைவில் காரியத்தை முடி'' என்றான் சேகர்.

பிளாஷ் லைட்டை ஏற்றி மேடானதொரு பகுதியில் வாகாக வைத்திருந்தான். சேகர். இருவரின் வேலைக்கும் அது தோதாக இருந்தது. கோபாலின் உடல் நல்ல வலு உடையதாதலினாலும் காலையில்தான் மூடிய குழியானதினாலும்

சேகரின் திட்டத்தைச் செயல்படுத்த அதிக நேரம் ஆகவில்லை.

''சேகர்..?'' என்றான் கோபால் குழிக்குள் இருந்தபடி.

அவன் அழைத்ததன் பொருளை அதில் கலந்திருந்த ஓர் அச்சம், அருவருப்பு இவை மூலம் உணர்ந்து கொண்ட சேகர், ''சரி... நீ மேலே வா... இனி ஆக வேண்டிய காரியங்களுக்கு உனக்கு மனோதிடம் கிடையாது'' என்றான். தன் வாக்கிங் ஸ்டிக்கை ஊன்றியபடி குழிக்குள் குதித்தான்.

குழிக்கு நேரே மரக் கிளையில் வாகானதொரு பகுதியில் தூளிக் கயிறு போல் சேகர் தான் கொண்டு வந்திருந்த கயிற்றை மாட்டி ஓர் ஏற்பாடு செய்திருந்தான். அதன் இரு முனைகளிலும் ஒரு பொருளைக் கட்டிவிட்டு மரத்தோடு சுற்றியிருந்த கயிற்றைப் பிடித்து இழுத்தால் பாரம் தூக்கி எந்திரமாக அந்தத் தூளிக் கயிறு செயல்படும். ராணுவத்தில் சேவை செய்திருக்கும் சேகருக்குக் கயிறுகளை எப்படி வெவ்வேறு முடி போட்டுப் பிணைத்துப் பயன்படுத்த வேண்டும் என்ற கலை தெரியும். டார்ச் விளக்கு வெகுநேரமாக எரிந்து கொண்டிருந்ததனால் ,அதன் ஒளி குன்றி யிருந்தது. முதலில் அதை அமைத்த கோணத்தில்' குழிக்குள் இப்போது வெளிச்சம் விழவில்லை.

''கோபால்! அந்த விளக்கைக் கொஞ்சம் சரியாக வை — குழிக்குள் வெளிச்சம் விழும்படி'' என்றான் சேகர். மண்டியிட்டு உட்கார்ந்திருந்த அவன் கைகள் வெள்ளைத் துணி சுற்றிய கந்தசாமியின் உடல் மீதிருந்த மண்ணை ஒதுக்கித் தள்ளியதோடு பக்கவாட்டிலும் மண்ணைப் பறித்தன.

கல்லறைப் புதை குழியின் ஓரத்தில் டார்ச் விளக்கோடு நின்றிருந்த கோபாலின் உள்ளம் அசாதாரணமான வேகத்தோடு அடித்துக் கொண்டிருந்தது. ரொம்ப தைரியசாலி அவன். இப்போதுள்ள அவன் மனநிலைக்குப் பீதி என்றோ பயமென்றோ பொருளில்லை. அப்படியானால்? விவரிக்க முடியவில்லை. சேகர் ஒரு காரியத்தில் ஈடுபட்டிருக்கும் போது பிறர் கேள்வி கேட்பதை விரும்பாதவன். ஆகவே இந்தக் காரியத்தின் உட்பொருளையும் அறிந்து கொள்ள முடியவில்லை அவனால்.

''கோபால்...'' குரல் கொடுத்தான் சேகர், குழிக்குள்ளிருந்து. ''அந்தக் கயிற்றைத் தழையவிடு'' என்ற உத்தரவு பிறந்தது அவனிடமிருந்து. கோபால் டார்ச்சை வாகானதொரு மேட்டில் வைத்துவிட்டு மரத்தில் சுற்றியிருந்த கயிற்றை அவிழ்த்துத் தளர்த்தினான். தூளிக் கயிறு போன்ற இரு முனைகள் மெள்ளக் குழிக்குள் இறங்கின.

உள்ளே வந்த கயிற்றின் ஒரு முனையை வெள்ளை மூட்டை உருவத்தின் கால்மாட்டுப் பக்கமும், மறு முனையைத் தலைப்பக்கமுமாக அடியில் நுழைத்துக் கட்டினான். ''கோபால்! கயிற்றை மேலே . இழு...நிதானமாக.''

கோபால் கயிற்றை இழுத்தான். குழிக்குள் மண்ணிலிருந்து விடுபட்டு, வெள்ளைத் துணி சுற்றிய மூட்டை உருவம், தன்மீதிருந்த மண் உதிர உதறிக்கொண்டு மேலே கிளம்பியது.

''இன்னும்... ஒரே சீராக இரு கயிற்றையும் சேர்த்து இழு கோபால். ஒரு பக்கம் மட்டும் தழைகிறது. ஆ..சரி... அப்படியே இழு.''

கந்தசாமியின் உடல் இப்போது அந்தரத்தில், கல்லறையின் பூமி மட்ட விளிம்புக்கு நேராக உயர்ந்துவிட்டது. அதன் அடியில் சேகர் நின்றிருந்தான்.

''கோபால், அந்தக் கயிற்றை அப்படியே நழுவாமல் மரத்தில் இறுக்கிப் பிணைத்துவிட்டு டார்ச் விளக்கை என்னிடம் போடு'' என்றான் சேகர். அவன் ஆணைப்படி கயிற்றைப் பிணைத்து விட்டுக் கோபால் மங்கிக் கொண்டிருந்த டார்ச் விளக்கின் ஒளிக் கற்றையைக் குழிக்குள் திருப்பினான், அதைச் சேகரிடம் கொடுக்க.

அங்கே...?

சேகர் மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டு தன் இரு கைகளாலும் மண்ணைத் தோண்டிக் கொண்டிருந்தான். சற்றுச் சிரமமான காரியம் தான். ஆனால் தரை கெட்டிப்பட்டிருக்கவில்லை. குழி தோண்டிய பின் அதில் மண்ணைப் போட்டு மூடினால், அந்த மண்ணை மறுபடியும் தோண்டுவது அப்படி யொன்றும் சிரமமில்லையே.

கோபாலுக்கு வியர்வை வெள்ளமாக வழிந்தது. அப்படி யொன்றும் புழுக்கமில்லை. சிறு தூற்றல் வேறு போட்டுக் கொண்டிருந்தது. ஆனாலும் கோபாலின் உடல் வியர்வையால் தெப்பலாகி இருந்தது. குழியின் விளிம்பில் மண்டியிட்டு அமர்ந்திருந்த அவன் முகத்துக்கு நேரே வெள்ளைத் துணி சுற்றிய கந்தசாமியின் இறந்த உடல் அந்தரத்தில் கயிற்றில் தொங்கிக் கொண்டிருந்தது. அதைப் பார்க்கக் கூடாது என்று அவன் உள்ளத்துக்கு உத்தரவு பிறப்பித்தாலும் கண்கள் ஏனோ அடிக்கடி அந்த அருவருக்கத் தக்க காட்சி




பெரிய குடும்பங்களுக்கு இந்தப் பெரிய சைஸ் விக்கோ வஜ்ரதந்தி மிகவும் பொருத்தமானது. உடையாத திறன் பிளாஸ்டிக் பெட்டி காலியானதும் குடும்பச் சாமான்கள் வைக்க மிகவும் உபயோகமுள்ளதாகும். சின்ன சைஸ் மீடியம் மற்றும் சிறிய சைஸ்கள் இவை அனைத்தும் பிளாஸ்டிக் பெட்டிகளில் கிடைக்கும்.

பிரபல ஆயுர்வேத தயாரிப்பான விக்கோ வஜ்ரதந்தி பல்பொடி பல வருஷ ஆராய்ச்சியின் பயனாக அபூர்வ மூலிகைகளால் தயாரிக்கப்பட்டுள்ளது. அதிக நாள் வைக்கக்கூடியது. உறுதியான ஈறுகள், சுத்தமான பிரகாசமான பற்கள் இவற்றுடன் பல் வியாதிகளையும் சொத்தையையும் தடுத்து பாதுகாக்கிறது.

# விக்கோ வஜ்ரதந்தி

பல் சுகாதாரத்திற்கு ஒப்பற்றது.

விக்கோ லாபொரெட்டரீஸ் தாதர் பம்பாய் 14

இலங்கை, மலேயா, சிங்கப்பூர் ஆகிய இடங்களுக்கு ஏஜண்டுகள் தேவை

ஸ்டாக்கிஸ்டுகள் : R. L. கொடர் & கோ., 50, பந்தர் தெரு, சென்னை-1

யைக் காண அதன் மீது தாவிக் கொண்டே இருந்தன.

குழிக்குள்...?

சேகரின் உழைப்பு வீண் போகவில்லை. அவன் விரல்கள் அவன் எதிர்பார்த்ததையே உணரத் தலைப்பட்டன. மண் விலக விலக அது ஓர் உருப்பெறவும் தொடங்கியது.

அதே சமயம் டார்ச் விளக்கின் ஒளிக் கற்றை களின் முடிவில் கண்ட காட்சி..? கோபாலுக்கு மூச்சு முட்டியது. வாய் உலர்ந்தது. இனம் தெரியாததொரு தவிப்பு.



"நாளையிலிருந்து எங்க விட்டில் வேலை செய்ய வர்றயா?"
"நீங்க போடற காப்பியைச் சாப்பிட்டுப் பார்த்துட்டுத்தான் சொல்ல முடியுங்க."

"சேகர்..." என்று அவன் வாய் அவனை அறியாமல் உளறியது ஏன்? குழிக்குள் சேகரின் கைகளுக்கிடையே மண்ணின் மேலாக அவன் கண்ட அந்தக் காட்சிதான் காரணம்.

கோபாலின் கலவரமான குரலைக் கேட்ட சேகர் சட்டென்று டார்ச் விளக்கின் பொத்தானை இழுத்து அதை அணைத்தான். "இனி இங்கு வெளிச்சம் வேண்டாம். என் குழப்பங்களுக்கு வெளிச்சம் கிடைத்து விட்டது..... எங்கே இந்த என் வாக்கிங் ஸ்டிக்கைப் பற்றிக்கொள். நான் மேலே ஏறி வரு கிறேன். உறுதியாகப் பற்றிக்கொள்" என்று கூறித் தன் கைத்தடியை மேலே உயர்த்தினான். கோபால் அதைப் பற்றிக்கொள்ளச் சேகர் தன் சரியான ஒரு காலைக் குழியின் பக்க வாட்டில் உதைத்துக் கொண்டு எம்பி னான். கோபாலின் உறுதி படைத்த பிடியின் ஒத்துழைப்போடு ஒரே உந்த லில் மேலே ஏறி வந்து உட்கார்ந்து கொண்டான் சேகர். இப்போது அவன் பார்வை குழிக்குள்ளேயே லயித் திருந்தது. உடம்பெல்லாம் மண், அழுக்கு. அவன் முகத்தில் ஓர் இறுக்கம்.

கோபால் பேச்சற்றுப் பேச முடியாத படி தொண்டை வறண்ட நிலையில் "சேகர்....அது ....அங்கே...?" என்று குழறினான்.

மேலே ஏறியபோது மண் மேட்டில் தான் வைத்த டார்ச்சை எடுத்து மௌன மாக அதன் பொத்தானை அழுத்தி ஒளி உண்டாக்கி அதைக் குழிக்குள் பாய்ச்சினான் சேகர். காளியப்பனின் உயிரற்ற முகம் அங்கே இவர்களைப் பார்த்தபடி கிடப்பது தெரிந்தது.

**வா**னம் குமுறிக் கொண்டிருந்தது...

வெகு நேரமாகவே குமைந்து கொண் டிருந்த அது, இப் போது கொட்டிக் கவிழ்க்கச் சரியான வேளையை எதிர்பார்த் துக் கொண்டிருந்தது — நிறை கர்ப்பிணிப் பெண் தன் சுமையைக் குறைக்கத் தவிப்போடு காத்துக் கொண்டிருப்ப தைப் போல.

'சட சட சட...'

பெருந் தூற்றலைப் பரவலாக உதறி விட்டு ஓடியது மேகம். இது பெரு மழைக்கு முன்னறிவிப்போ?

சேகரும் கோபாலும் வானத்தை அண்ணாந்து பார்த்தார்கள். புதை குழிக்கு மேலாகக் கந்தசாமி அவர்களின் சடலம் வெள்ளை மூட்டையாகக் கயிற் றில் ஊசலாடியபடி நின்றது. அதைக் குழிக்குள் இறக்கிவிட முடியாது. அத னடியில் உள்ள காளியப்பனின் சட லத்தை வெளிக் கொணர்ந்தாக வேண் டுமே. ஆனால் இவ்வளவு உயரத்தில், அந்த வெள்ளைத் துணி சுற்றிய சவம் திரிசங்கு நிலையில் இருப்பானேன்? சேகர் மரத்தோடு பிணைத்திருந்த கயிற்றை அவிழ்த்துத் தளர்த்தித் தொங்கும் உட லைச் சற்றுக் குழிக்கு உள்ளாக இறக்கி மறுபடியும் கயிற்றை மரத்தோடு இறு கப் பிணைத்தான்.

இன்னொரு முறை பெருந் தூற்றலை வாரி இறைத்து, தான் குமுறிக் கொண் டிருப்பதையும் கொட்டி முழக்கப்போவ தையும் தெரிவித்து விட்டு மௌன மாயிற்று வானம். சேகரும் கோபாலும் அந்த வீச்சுக்கு விலக ஒரு மரத்தடியில் போய் ஒதுங்கி நின்றார்கள்.

"சேகர்... நாம் இங்கிருந்து சீக் கிரமே கிளம்பிவிட்டால் நல்லது என்று நினைக்கிறேன். காளியையும் தீர்த்து விட்டார்கள். இனி மீதமிருப்பது நாம் மூவர்தான்" என்றான் கோபால். அவன் குரல் காய்ந்து போயிருந்தது.

"இந்தப் பயங்கரமான கொலைகளைச் செய்தவனைக் கண்டு பிடிக்காமல் இங்கி ருந்து கிளம்பப் போவதில்லை கோபால்" என்றான் சேகர். "புதை குழியின் அடி

யிலே கண்ட காலடிகளைப் பற்றி நான் சொன்னது இப்போது விளங்குகிறதா? அந்தப் பாதச் சுவடுகள் வேலப்பனுடையவை அல்ல. ஏனென்றால் அவன் வெட்டியிருந்த ஆழத்துக்குப் பிறகு மேலும் தோண்டியிருக்கிறார்கள், இரவு நேரத்தில், காளியப்பனுடைய உடலுக்கு இட வசதி செய்வதற்காக. அவனைப் போட்டு மூடிய பின் அதன் மீது நின்றிருக்கிறான் கொலைகாரன். அவனுடைய பாதச் சுவடுகள்தான் அவை.''

கோபாலுக்குப் பேசவே பிடிக்கவில்லை. அங்கு இருப்பதே சங்கடமாக இருந்தது அவனுக்கு. ''காளியை நாம் இப்போது இப்படியே விட்டுப் போக வேண்டியதுதானா? மழை வேறு கொட்டும் போலிருக்கிறதே'' என்றான்.

''காளியை அப்புறப்படுத்தும் காரியத்தைப் போலீஸார் அல்லவா செய்ய வேண்டும்?''

''காளியை ஏன் இந்தக் கதிக்கு ஆளாக்கினார்கள் என்பதை உன்னால் ஊகிக்க முடிந்திருக்குமே சேகர். அது ஏன்?'' என்று கேட்டான் கோபால்.

''நேற்றிரவு அவனை வேப்ப மரத்துப் பங்களாவில் மறைந்திருக்கும்படி கூறி விட்டுக் கிளம்பினேமில்லையா? அப்போது அவனிடம் திராட்சைக் கொடி வீட்டைக் கண்காணிக்கும்படி கூறி விட்டுப் போனேம். அதன் அருகே போக வேண்டாம், அங்கு ஏதாவது ஆள் நடமாட்டம் இருக்கிறதா என்று மட்டும் கவனிக்கும்படி கூறிவிட்டுத் தான் போனேம். ஆனல் அவன் அங்கு போயிருக்கிறான். போகும்படியானதோர் உந்துதல் அவனிடம் ஏற்பட்டிருக்க வேண்டும். இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்தின் பிடியிலிருந்து தன்னை விடுவிக்கும் ஏதோ ஒன்றை அவன் அங்கு கண்டிருக்க வேண்டும். அது வேப்பமரத்துப் பங்களாவிலிருந்து அவனை வெளியேற்றி யிருக்கிறது. அந்த உண்மையை அவன் பார்த்துவிட்டான். ஆகவே இரண்டு காரியங்களுக்காக அவன் இனி எப்போதுமே பேச முடியாதபடி செய்யப்பட்டு விட்டான். முதல் காரணம் அவன் தான் கண்டதைப் பிறரிடம் சொல்லிவிடக் கூடாது என்பதற்காக. இரண்டாவது, கொலைகாரன் தன் குற்றத்தை நிரந்தரமாகக் காளியப்பனின் மீது சுமத்துவதற்காக.''

''காளியப்பனின் கார் சாவிக் கொத்து, திராட்சைக் கொடி வீட்டி னருகில் நமக்குக் கிடைத்தது அதனால் தானு?'' என்றான் கோபால்.

''ஆமாம். இன்ஸ்பெக்டரின் கவனம் காளியின்மீதுதான் பதியும் என்பதை ஆரம்பத்திலேயே கொலைகாரன் அறிவான். அவன் திட்டமும் அதுதான். அதைச் சாதகமாகக் கொண்டுதான் நிர்மலாவின் டம்பப் பையைக் காளியின் டாக்ஸியில் பதுக்கி வைத்தது. இந்தச் சாவிக்கொத்து அவனையே குற்றவாளியாக்கக்கூடிய அடுத்த வலுவான தடயம். திராட்சைக்கொடி வீட்டின் நிலவறையிலுள்ள இரண்டு சடலங்களைக் கண்டு பிடிப்பதற்கான வழியை வகுத்துக் கொடுக்கும் கருவியாகவும், அதே சமயம் காளியின் கழுத்துக்குச் சுருக்குக் கயிருகவும் அந்தத் தடயம் செயல்பட வேண்டும் என்பது கொலைகாரனின் திட்டம். விசாரணைக்குக் காளியை வெளியில் விட்டு வைக்கக் கூடாது. அவனது நிரந்தர மறைவு ஒன்றே அவன்தான் கொலைகாரன் என்பதை உறுதிப்படுத்தும். நேற்றுவரை கொலைகாரனின் குறியெல்லாம் காளியின் மீதுதான். வேறு யார்மீதும் இல்லை. இப்போது அவன் கவனம் உன்மீது திரும்பியிருக்கும் என்று நினைக்கிறேன்'' என்றான் சேகர்.

''என்...ன? என்மீதா? நான் என்ன செய்தேன்?'' குழறினான் கோபால்.

''நேற்றிரவு இதே கல்லறைக்கு அருகில் உண்மைக் குற்றவாளியைத் திகைப்படையச் செய்யவில்லையா நீ? காளியைப் புதைத்து விட்டுத் திரும்பிய கொலைகாரனின் மீது நீ எதிர்பாராத விதமாக மோதிக் கொண்டு அவனைத் திடுக்கிட வைத்துவிட்டாயே! அப்படி அவன் மீது மோதிக் கொண்டிருக்கா விட்டால் புதை குழிக்குள் நான் அந்தக் காலடிகளைப் பார்த்திருக்க மாட்டேன். அது மட்டுமல்ல. அந்தச் சாவிக் கொத்தும் கூட நமக்கு அந்த இடத்தில் கிடைத்திருக்காது. அது நம் கையில் சிக்க வேண்டும் என்பது கொலைகாரனின் திட்டம் என்றாலும் இத்தனை அருகே இங்கேயே கிடைக்கச் செய்ய வேண்டுமென்பது அவன் நோக்கமல்ல. வேறு எங்காவது அதைப் போட்டு வைப்பதே அவன் எண்ணம். காளியப்பனின் உடல் கண்டுபிடிக்கப்படவே கூடாது — கொலைகாரனின் சரியான திட்டம் அதுதான். ஆனல் அவனுடைய சாதுரியமான சதித் திட்டம் குலையும்படியான சூழ்நிலையை நீ உருவாக்கி விட்டாய். அவன்மீது நீ மோதிக்கொண்டபோது அந்தச் சாவிக் கொத்து அவன் நினைக்காத இடத்தில் தானும் தவறி விழுந்து அவனையும் நமக்குக் காட்டிக் கொடுத்து விட்டது...'' என்றான் சேகர்.

(தொடரும்)




# சந்திரிகா

## ஆயுர்வேதிக் டாய்லெட் சோப்

உங்கள் சருமத்தை
புதுமலர் போன்று மிருதுவாகவும்,
தண்ணிலவு போன்று மென்மையாகவும்
பாதுகாப்பது சந்திரிகா சோப் மட்டுமே.

சந்திரிகா ஆயுர்வேதிக் டாய்லெட் சோப் இந்த இனத்தில் இது ஒன்று மட்டுமே

சந்திரிகா பிராடக்ட்ஸ் கோயம்பத்தூர்-2, சென்னை-10.

**விடிந்தால், வினைதீர்த்தானுக்குக் காது குத்து!...**

ரங்கூன்காரர் வீடு அமளிதுமளிப்பட்டது.

சனிக்கிழமை விரதம் பிடித்து, அல்லும் பகலும் தவம் இருந்து பெற்ற செல்லப் பிள்ளைக்குக் காதணி வைபவம் என்றால், கேட்கவா வேண்டும்?

வீட்டின் முன்னே கிடந்த நூறு குழி கொண்ட வாசல்வெளியைச் சுற்றிப் போடப் பட்டிருந்த பந்தலிலே மையம் கணித்துப் போடப்பட்டிருந்த மணவறையில் ரத்தினக் கம்பளத்தின் மீது கம்பீரமான மிடுக்கோடு அட்டணைக்கால் போட்ட வண்ணம் வீற்றிருந்த நல்லதம்பிச் சேர்வை தம்மைச் சுற்றியிருந்த பத்துப் பேர்களையும் மீண்டும் ஒரு தடவை ஆழ்ந்து நோக்கினார்.

பைத்தியத்தைச் சுற்றித்தான் பத்துப்பேர் என்ற விதி இல்லையே? — பணக்காரரைச் சுற்றியும் இந்தப் பத்துப் பேர் கூடியிருப் பார்கள் அல்லவா?

நல்லதம்பி சேர்வை சாமான்யமான புள்ளி இல்லை. 'பசை' மிகுந்தவர். ரங்கூன்காரர் வீடு என்றால், பனங்குளம் கிராமத்திலும் சரி, அதற்கு அண்டை அயலில் இருந்த பதினாறு ஊர்களிலும் சரி, ஏகப் பிரசித்தம். ''நல்ல தம்பிச் சேர்வையா? இல்லே, கொக்கா என் கிறேன்!'' என்று தம்முடைய கொடுவாள் மீசையில் கையைப் போட்டுச் சொல்லிக் கொண்டே ஓர் அதிர்வேட்டுச் சிரிப்பைக் கக்க ஆரம்பித்து விட்டாரென்றால், சேர்வையின் முன்னே பூச்சாண்டி காட்டும் சோதனை எது வுமே தவிடுபொடி என்றுதான் பொருள்!

என் போட்டால் அது விழும் சத்தம் கேட் கும்; அத்தனை அமைதி. ஆனால் என்னைப் போட்டுச் சோதிக்கத்தான் யாருக்கும் திராணி இல்லை.

''ஊம்... அப்பாலே ஆகவேண்டியது?''... என்று ஒரு கேள்விக் குறியை எழுப்பிய கையோடு மறுதரமும் கொத்துப் புகை யிலையை அள்ளிக் கொடும்பில் அடக்கிக் கொண்டார் சேர்வை. 'முடிவான பதிலைச் செப்ப வேண்டிய நீங்களே கேள்வியைக் கொக்கி போட்டால், நாங்க என்ன செய் வோம்?' என்கிற தாத்பரியத்தில் பரிதாபமாக விழித்த அந்தப் பத்து ஜோடி விழிகள் அப் போது அவருக்குப் பெருமிதம் நல்கியிருக்க வேண்டும். பேழையை மூடியபடி எழுந்து, எச்சிலை உமிழ்ந்து திரும்பி, தம்முடைய இருப் பிடத்தை அடைந்து, பொட்டுப் பொழுது ஆசுவாசப் பெருமூச்செறிந்த சேர்வை பேச லானார்:

''தலைக்கு உதவாத காரியங்களுக்கெல் லாம் நான் என்னோட மூளையைச் செலவழிக்க ஒப்பமாட்டேன் என்கிற தகவல் உங்க எல் லோருக்கும் அத்துப்படி. ஆனா, விடிஞ்சதும் நடக்க வேண்டிய ஒரு நல்ல சுப காரியத்தை உத்தேசிச்சும் என்னை மதிக்கிற உங்க அம் பிட்டுப் பேரோட பேச்சையும் மதிச்சு நான் என் மூளையைப் போட்டுக் குழப்பிக்கிட்டுங் கூட, எனக்கு — எம் மனசுக்கு உங்க யோசனை அத்தனை வசமானதாகப் படக் காணோம்! ஆனாலும், உங்களுக்கோசரம்தான் உங்க இஷ்டப்பிரகாரம் அந்தப் பயல் சாமியப்ப **னுக்குக் காதுகுத்துப் பத்திரிகை அனுப்பச் சம்மதிக்கிறேன்!''**

பேசி முடித்ததும், சேர்வையின் நெற்றி நரம்புகள் விம்மிப் புடைத்தன. வெற்றிலைத் தட்டை எட்டி எடுத்துப் பாக்கொன்றை ஆத் திரத்தோடு 'நறுக்'கென்று கடித்தார் அவர். ''இந்தாங்க பேனா. அங்கே இருக்கு பத் திரிகை. யாராச்சும் அந்தப் பயல் பேரை எழுதுங்க. என்னோட ஜென்ம விரோதியின் பேரை என் கையினாலே இந்த ஜன்மத்திலே எழுத மாட்டேன்!'' என்றார். அவர் குரலில் வெஞ்சினம் சுடர் தெறித்தது.

கொண்டைக்காரச் சுப்பையா 'பையப் பைய'த் தொண்டையைக் கனைத்துக் கொண்டே, முன் நெற்றியில் புரண்ட நரை முடிகளைக் கோதிக் கொண்டையில் செருகி விட்ட வண்ணம், ''தம்பி! உங்களுக்கு வய சிலே மூத்தவன் என்கிற தைரியத்திலே ஒரு சங்கதி சொல்றேன். ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணுன்னு கருவேப்பிலைக் கொழுந் தாட்டம் பெத்த உங்க தங்க மகன் காது குத்துப் பத்திரிகையிலே உங்க கையினாலேயே உங்க மச்சான் சாமியப்பச் சேர்வையோட பேரை எழுதப்படாதாங்காட்டி?'' என்றார்; சொல்லிவிட்டு, குற்றம் புரிந்த பாவனையில் நல்லதம்பிச் சேர்வையை ஏறிட்டுப் பார்த்தார்.

சேர்வையின் கறுத்த பெருவிழிகள் காந்த விளக்கின் வெளிச்சத்தில் கோபாவேசம் பூண்டுமின்னின. ஐம்பதுவயசுக்காரரின் கழுத் தில் ஈசனின் பாம்பெனத் தொங்கிய 'மைனர் செயின்' மின்னியது. அவர் ஓங்காரமாகச் சிரித்தார். சிரித்த சோர்வு நழுவப் பல மாக மூச்சு விட்டார்.




''கொண்டைக்காரச் சுப்பையா அண்ணனா இப்படிச் சொல்றீங்க?' ஊர் ரெண்டு பட்டு, நான் பெரிய கட்சியை ஆரம்பிச்சு வருஷம் பத்து ஆகப் போகுது. ஊர் நாட்டிலே எனக்குள்ள கியாதியிலே பொருமைப்பட்டு, பரம்பரை பாத்தியமாய் எனக்குக் கிடைச்சிட்டு வந்த காளி கோயில் முதல் காளாஞ்சி மரி யாதைக்குக் குறுக்கே சாமியப்பன் பயல் என்னிக்கு விழுந்தானோ, அன்னிக்கே எங்க ரெண்டு பேருக்கும் குறுக்கே விழுந்திடுச்சு பகைமைப் படுதா. காளாஞ்சித் தகராறில் நானும் அவனும் கைகலந்து அடிச்சுக்கிட் டப்பவே, எங்க ரெண்டு பேர் குடும்பமும் சொந்த பந்தம் விலக்கி, ஒண்ணை விட்டு ஒண்ணு விலகிடுச்சு. நான் பெரிய கட்சியை ஆரம்பிச்சேன். அவன் சின்னக் கட்சியை ஆரம்பிச்சான். ஒண்ணு இல்லே, ரெண்டு இல்லே, வருஷம் பத்து ஆளாய்ப் பறந் திருச்சு. எங்க குரோதத்துக்கும் வயசு

பத்து ஆகுது! எங்களுக்குள்ளாற நல்லது கெட்டது எதுவுமே இல்லே. முறைப் பாட்டுக்காரங்க கணக்கிலேதான் இருந்திட்டு வாரோம். இம்மாங்கொத்த நிலைமையிலே நான் அந்தப் பயல் சாமியப்பனுக்குக் காதுகுத்துப் பத்திரிகை அனுப்பச் சம்மதிச்சதே பெருங் காரியம். அப்படியிருக்க, எங் கையினுலே வேறே அந்தப் பயலுக்குப் பத்திரிகை எழுதவா? ஊஹூம்! ஏலாது, ஏலவே ஏலாது! நல்லதம்பிச் சேர்வையா, இல்லே, கோக்காங்கறேன்?...''

கண்களில் படர்ந்த ரத்தச் வெப்பு இன்னமும் மாறவில்லே.

சுப்பையா பிரமை தட்டிப்போய்விட்டார். வேதனே நெருடிய அரைச் சிரிப்போடு, ''உங்க வீம்பு எங்களுக்கெல்லாம் புரிஞ்சதுதான். உங்களுக்கு இஷ்டம் இல்லேன்னு சரி. இது விசயத்திலே நான் மல்லுக்கட்டினதைப் பெரிசுபடுத்திக்கிடாதிங்க, தம்பி. தண்ணியைத் தடி கொண்டு அடிச்சாலும் தண்ணியை விட்டுத் தண்ணி விலகாது அப்படின்னு ஊர் நாட்டிலே நாலும் தெரிஞ்சவங்க சொல்றது வளமை. அது பொய்ச்சுப் போயிடும் போலே! சரி, சரி! ஏலே, பொன்னு சேர்வைக்காரர் பேனுக் குச்சியை வாங்கி அவுக மச்சான்காரர் சாமியப்பச் சேர்வை பேரைக் காதுகுத்துத் தாளிலே எழுதுடாலே!'' என்ருர் அவர்.

கொண்ட கொள்கையை நிலைநாட்டித் தீர்க்கும் தம்முடைய வீம்புக் குணத்தை மீண்டும் ஒருமுறை பிரகடனம் செய்பவரைப் போல் சேர்வை நீர்த்தாட்சிண்யமாகவும் உக்கிரமாகவும் சிரித்தார்; குடுமியைத் தட்டி முடிந்து கொண்டார்; வெற்றிலே போட்டுக் கொள்ளத் தொடங்கினர்.

ஊர் வெற்றிலே பாக்குத் தட்டுக்களைத் தெருவாரியாக வரிசைப்படுத்தி வைப்பதில் முனைந்திருந்தார் சுப்பையா. அந்தந்தத் தட்டுக்களில் இருந்த அழைப்புக் கட்டுக்கள் அவருக்கு வெகுவாக உதவின. தலையைத் திசை திருப்பியபொழுது, சாமியப்பச் சேர்வைக்காக எழுதப்பட்ட மடல் ஒதுங்கிக் கிடப்பதைக் கண்டதும் உடனே அதை எடுத்து ஊர் வெற்றிலே பாக்குத் தட்டை இனம் கண்டு அதில் வைத்தார் அவர்.

''அண்ணே, அந்தப் பத்திரிகையைத் தனிப்பட வைச்சுக்கிட்டு நீங்களே அந்தப் பயல் கிட்டே நீட்டிப்பிடுங்க. ஊர் வெற்றிலே பாக்கு வச்சு அதிலே காது குத்துப் பத்திரிகையையும் வச்சு ஊர் முறைப்படி மரியாதை கொடுத்து அழைக்கிற சங்கதி என்னே மதிக்கத் தெரிஞ்சவங்களுக்கு மட்டும்தானுக்கும்!'' என்ருர் நல்லதம்பி.

இப்புது நடவடிக்கையைக் கேட்ட கொண்டைக்கார சுப்பையா மலைத்து விட்டார். ''தம்பி, சாமியப்பன் யார்? அன்னியமா, அசலா? அவர் உங்க சொந்த மச்சான். உங்களுக்கு வாழ்க்கைப்பட்ட வள்ளியம்மையோட கூடப் பிறந்த புள்ளி. விடிஞ்சதும் நடக்க விருக்கிற உங்க அருமைப் பிள்ளை

# சீர்

பூவை எஸ். ஆறுமுகம்

போட காது குத்துச் சடங்குக்குக் கொட்டு முழக்கோட — அம்மான் உலுப்பை — அம்மான் சீர் கொண்டாரக் கடமைப்பட்ட ஆளாக்கும்! அம்மான் சீர் வந்துதான் காது குத்து நடக்கவேணும் என்கிறது தலைமுறை தத்துவமாய்ப் பணங்குளம் சம்பந்தப்பட்ட அம்புட்டு ஊர் நாட்டிலேயும் ஒரு விதிமுறையாக இருந்துக்கிட்டு வருது!... அம்மன் காக ஆனாலும் அம்மான் சீருக்கு ஈடில்லேன்னு சொல்றதில்லேயா?'' என்றார்.

புருவங்கள் நெரிய, சேர்வை சொன்னார்: ''இது என் வீட்டு வைபவம். அம்மான் சீர் வராமல் நாளையத் தேவை — சடங்கு எவ்வளவு அந்தமா நடக்கப் போகுதின்னு காலம் பூற நீங்களே கண் கொண்டு காணத்தான் போறீங்க! நான் சொன்னால் சொன்னது தான்! ம்.. மேற்கொண்டு ஆகவேண்டியது களைக் கவனிங்க, சுப்பையா அண்ணே! நேரம் ஓடுது. பத்திரிகை கொடுத்திட்டு வரப் புறப் படுங்க!''

அப்போது:

மெட்டி ஒலிக்க வந்து நின்றாள் வள்ளியம்மை. அவள் முகத்தில் படர்ந்திருந்த சலனம் இன்னமும் மாறவில்லை; மறையவில்லை. இடுப்பில் துள்ளிக் கொண்டிருந்த வினைதீர்த்தான் வினை தீர்க்கத் துடிப்பவன் மாதிரி துடிதுடித்தான்.

அருமைத் திருமகனைக் கண்டதும் சேர்வையின் கடுகடுப்பெல்லாம் எங்கேதான் ஓடி ஒளிந்து கொண்டதோ? ''அப்பா!'' என்று கூவித் தாவி வந்த மகனை மடியில் போட்டுக் கொண்டே, தம் மனைவியை ஏறிட்டு ஊடுருவினார். ''வள்ளியம்மை, இப்பத்தான் வந்தியாக்கும்?'' என்று கேட்டார். அவளுடைய முகத்தில் நிழலாடிய சஞ்சலத்தை அவர் கவனிக்கத் தவறவில்லை.

''ம்''கொட்டினாள் வள்ளியம்மை. ''காவணத்தை நாடி இப்பத்தான் வந்தேன்'' என்று பெருமூச்செறிந்தாள்.

''உன் மூஞ்சி ஒரு மாதிரியா இருக்கே, ஏனும்?'' தங்கப் பற்கள் இரண்டும் தெரியச் சிரித்தார் நல்லதம்பி.

''என் விதியை நினைச்சேன்!''

''ஓஹோ! உன் தம்பி சம்பந்தமாய் எனக்கும் சுப்பையா அண்ணனுக்கும் ஊடாலே நடந்த பேச்சைக் கேட்டுக்கினு இருந்தியாக்கும்?'' என்று வினயமாகக் கேட்டார் அவர்.

''ஆமா; கேட்டு என்ன புண்ணியம்? உப்புக்கு ஆகப்போகுதா, புளிக்கு ஆகப்போகுதா. ம்...உங்களுக்கும் என் தம்பிக்காரங்களுக்கும் ஊடாலே விதி புகுந்து விளையாட ஆரம்பிச்சுத்தான் பத்துத் தேரோட்டம் முடிஞ்சிடுச்சே?... எப்பத்தான் விதிக்கு விளையாட்டு ஆசை மாறுமோ?... வார விதி ராத் தங்காதின்னு சொல்றது உண்டு. ஆனா நம்ம ரெண்டு குடும்பங்களுக்கு நடுவிலே வந்த விதியோ ராவும் தங்கிப் பகலும் தங்கி அலுக்காமல் சலிக்காமல் பத்து வருசமாய் விளையாடிக்கிட்டிருக்குதே? என்னிக்குத்தான் தெய்வம் விளையாட ஆரம்பிக்கப் போகுதோ? ம்!... வாங்க சோறு உண்ண. மணி எட்டு அடிச்சாச்சு. மகனைத் தூங்கப்பண்ணனும். சோறு ஆறிப்போகுத்தான் கன்னாப்புக் கோபம் மூக்கு முனையிலே வந்திடுமே உங்களுக்கு!'' என்று படபடவென்று சொல்லி விட்டு மகனை வாரியணைத்த வண்ணம் வீட்டுக்குள் பிரவேசித்தாள் வள்ளியம்மை.

''பைத்தியக்காரி!'' என்று சிரித்தார் நல்லதம்பிச் சேர்வை. வழக்கமான சிரிப்பா? ஊஹூம்!

''பாசமும் பைத்தியமும் ஒண்ணேதான் தம்பி!''

சொன்னவர் சுப்பையா. அவர் பைத்தியமா? ஊஹூம்!...

''அப்பா! அப்பா!'' என்று ஓடிவந்தான் பாலகன்.

''வாடா, என் தெய்வமே!'' என்று தம் அருமைப் பிள்ளையை வாரியணைத்து, கட்டி முத்தங்கள் ஆயிரம் கொடுத்தார் சேர்வை.

அழகுத் தெய்வமாம் பால முருகனைப் போன்று குழந்தை சிரித்தான். வல்லவேல் முருகனின் — வினைதீர்த்தவனின் வரப்பிரசாதமல்லவா இந்தப் பாலகன், வினைதீர்த்தான்? மயில் பதக்கம் சிரித்தது.

''அப்பா! அப்பா!'' என்று என்னவோ கேட்க வாயெடுத்தான் பாலகன்.

அப்போது:

கொண்டைக்காரச் சுப்பையா கையில் ஏந்திய அழைப்பிதழோடு வந்து நின்றார். ''உங்க மச்சான்காரர் காதுகுத்துப் பத்திரிகையை வாங்க மாட்டேன்னு சொல்லிட்டார், தம்பி!'' என்று செய்தி சொன்னார்.

''அப்படியா சமாசாரம்? இமிர் பிடிச்ச பயலாச்சே சாமியப்பன்?'' என்று கோபாவேசம் பொங்கச் சொன்னார் நல்லதம்பி.

தந்தையின் முறுக்கு மீசையைத் திருகியபடி, ''எம்ப்பா, நம்ப அம்மானையா திட்டுறீங்க?'' என்று பால் வதனம் சலனம் காட்டக் கேட்டான் வினைதீர்த்தான்.

சேர்வையின் மனம் எங்கே சுற்றியதோ? அவர் பதில் எதுவும் சொல்லாமல் மௌனம் காத்தார்.

''அப்பா... அப்பா!... நம்ப அம்மான் என் காதுகுத்துக்கு வரமாட்டாங்களா?''— என்று வினவியது பிஞ்சு நெஞ்சு.

''ஊஹூம்!''

''எம்ப்பா?''

''சண்டை!''

''சண்டைன்னா 'டூ'தானே?''

''ம்!''

''டூ போட்டுக்கிட்டாத்தான் ராசி ஆகிப்புடலாமே?... நாம்பளும் அம்மானும் அது மாதிரி ராசி ஆகிப்புடலாம் அப்பா!''

''ஊஹூம்!''

''எம்ப்பா... ஊஹூம்?''

''நீ சின்னப்பிள்ளை. நீ சும்மா விளையாடு!''

அவன் — பாலகன் வினைதீர்த்தான் சின்னப் பிள்ளையா? ஐந்து வயதுப் பிள்ளை பேசுகிற பேச்சா? பிஞ்சுக் கரங்களில் மின்னிப் பளிச்சிட்ட தங்கக் கொலுசுகள் குலுங்கக் கண்களைக் கசக்கி விம்மிக் கொண்டே, ''அப்பா, உங்ககூட 'டூ' தான்!'' என்று 'டூ' காட்டி விட்டு அப்பால் நடந்தான் வினைதீர்த்தான்.

சேர்வை துடித்துப் போனார். மகனின் கண்ணீர் அவரது பாச மனத்தில் உதிரமாகச் சொட்டியிருக்க வேண்டும். ''என் கண்ணே,

उड़िशा सिमेंट लिमिटेड

ORISSA CEMENT LIMITED

Head Office: 4, SCINDIA HOUSE, NEW DELHI-1

POST BOX : 364
NEW DELHI-1

# எழுத்து மூலமே உத்தரவாதம் அளிக்கிறோம்

உங்களது உலைக் கற்கள் தேவைகளுக்கு ஒரிஸ்ஸா சிமெண்ட் ஸ்தாபனத்திற்கு ஆர்டர் கொடுத்தீர்களானால், உங்கள் உற்பத்தி தடைப்படாது. அவை குறித்தகாலத்தில் உங்களுக்கு கிடைக்கும்; காலதாமதமே ஏற்படாது என்று நிச்சயமாக நீங்கள் இருக்கலாம்.

உலைக் கற்களுக்கு ''டால்மியா'' என்பது, இவற்றை உபயோகப்படுத்துபவர்களுக்கு நன்கு தெரியும். நீண்டகால ஒப்பந்தத்தில் ஆர்டர்களையும் நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம்.

Yours faithfully,
for ORISSA CEMENT LIMITED

Registered Office: RAJGANGPUR (Ori

DALMIA
REFRACTORIES

UUVAN/UCL/7113



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது.

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது

## அந்த 'உணர முடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு






உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது என்பதை எந்த டாக்டரும் கூறுவார். இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு— சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச் சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட ஃபாஸ்ஃபேட்டுகள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.

அப்பா கூட "டூ" போடலாமா?'' என்று கெஞ்சினார்.

''நீமட்டும் அம்மான்கூட 'டூ' போடலா மாக்கும்?''

சேர்வை விதியைச் சந்தித்த மாதிரி குலை நடுங்கினார். கேட்ட கேள்விக்கு விடை கொடுக்காமல், ''கண்ணே, அப்பா கூட ராசி போடுடா!'' என்று மறுபடியும் கெஞ்சிக் கூத்தாடினார்.

''மாட்டேன்!'' என்று அடம் பிடித்து விட்டுச் சதங்கைகள் குலுங்க விதியாக நழுவினான் வினைதீர்த்தான்!

சேர்வையின் கன்னங் கறுத்த கண்கள் கசிந்தன. ஜரிகைத் துப்பட்டாவைக் கொய்து கண்களைச் சுத்தம் செய்துவிட்டு, பார்வையைத் திசை மாற்றினார். சிந்தனையில் மூழ்கியிருந்த சுப்பையாவை நோக்கி, ''என்ன சொன்னான் அவன்?'' என்று விசாரித்தார்.

''ஊர் வெத்திலெ பாக்கு வச்சு மரியாதை செய்யாத பத்திரிகையை ஏத்துக்கிட ஏலாது அப்படின்னு சொல்லிட்டார். அதோட, பத்திரிகையிலே இருந்தது அந்நிய ஆள் கையெழுத்து என்கிற துப்பும் புரிஞ்சுக்கிட்டார்!... பாவம், அவரோட பெண்சாதிக்கு இடுப்பு வலி கண்டு ரொம்ப அவதிப்படுதாம்! சாமியப்பன் கதிகலங்கிப் போய்க் குந்திக்கினு இருக்கார்!'' என்றார் சுப்பையா.

''எவன் எக்கேடு கெட்டா எனக்கென்ன?.. நீங்க மேற்கொண்டு ஆகவேண்டியதைக் கவனியுங்க. விருந்து அற்புதமா அமைஞ்சிட வேணும்!... அண்டை அயல் ஊர் நாட்டிலே இருக்கக்கூடிய பெருந் தலைகள் சாடா பேரும் கைநனைக்கிற விருந்தாக்கும்! அந்தியிலே கொடுத்த ஆயிரத்துக்கு அப்புறம் கணக்குக் கொடுத்தால் போதும்!...'' என்றார் நல்ல தம்பி. நெஞ்சில் இழை பின்னிய சலனத்தைத் துளியாவது வெளிக்காட்ட வேண்டுமே?— நல்லதம்பியா கொக்கா? ஆனால் அவரது இதயத்தின் இதயம் தவித்தது. 'அந்தப் பயல் சாமியப்பனோட மானத்தை வாங்க நான் நினைச்சேன்!.. கடைசியிலே அவன் என் மானத்தை வாங்கிப்பிட்டானே!... பாவிப் பயல்!'

அனுஷ நட்சத்திரம் சித்தயோகம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை ஐந்துக்கு மேல் ஆறரைக்குள், கடக லக்னத்தில் இருவளர் செல்வன் வினைதீர்த்தானுக்குக் காது குத்து!

விழாவுக்கான நேரம் நெருங்கிக்கொண்டேயிருந்தது.

''சுப்பையா அண்ணன்! நம்ப வினைதீர்த்தானைக் காரிலே வச்சு நேரே காளி கோயில் போய்ச் சாமி கும்பிட்டுப்புட்டு வீட்டுக்கு வந்ததும் காது குத்திப்பிட வேண்டியது தான்'' என்றார் நல்லதம்பிச் சேர்வை. ஜரிகை உருமாலே இளஞ்சுடரொளியில் பளபளத்தது.

''ஏ புள்ளே! வள்ளியம்மை! காதுகுத்த நேரம் நெருங்குது. சல்லியா மகனே எடுத்துக்கிட்டு ஓடியா புள்ளே!'' என்று பெருங் குரலெடுத்துச் சொன்னார் அவர்.

மறுகணம் மெட்டிச் சத்தம் கேட்டது.

''அத்தான்...!'' என்று உருகித் தவித்தவாறு வந்து நின்றாள் வள்ளியம்மை.



ஹாலிவுட் சிரிப்பு நடிகர் பாப் ஹோப் தாம் மேடையில் பேசும்போது உபயோகப் படுத்த நகைச்சுவைத் துணுக்குகளை எழுதிக் கொடுக்க எட்டு எழுத்தாளர்களைச் சம்பளம் கொடுத்து வைத்துக் கொண்டிருக்கிறார்.

இவ்விதம் பெருந்தொகை கொடுத்துப் பெறப்படும் ஜோக்குகளில் ஒன்றைக் காண்போம்:

''ஒரு 78 வயதுப் பெண் 28 வயதுப் பையனுடன் காரில் தனியாகப் போனாள். காரில் இரண்டு தடவை அவள் அவனை அறைந்தாள்.''

''எதற்கு நிறுத்தவா?''

''இல்லே, ஆரம்பிக்க!'' 'லைப்' - முத்து

சார்ஜெண்ட் மேஜர் ராம் என்பவர் மோட்டார் சைக்கிளில் ஏறி மனிதர்களைத் தாண்டுவதில் ஒரு புது ரிக்கார்ட் ஏற்படுத்திவிட்டார். சமீபத்தில் அவர் 'நாற்பத்தி ஒரு' மனிதர்களைப்



படுக்க வைத்துத் தாண்டினார். இதற்குமுன் இந்த உலக ரிகார்ட் முப்பத்திநாலுதான்!

- ''அசலம்''



''தயவுசெய்து நீ கிரிக்கெட்டைப் பற்றி எதுவும் பேசாமல் இருந்தால்தான் உன்னை நான் வெளியே அழைத்துச் செல்வேன்'' என்று பட்டோடி கண்டிப்பாகத் தம் மனைவி ஷர்மிளா தாகூரிடம் சொல்லிவிட்டார். காரணம், ஒரு சமயம் ஒரு விருந்தின்போது கிரிக்கெட்டில் ரொம்பவும் தெரிந்தது போல் ஷர்மிளா 'லெக்-கட்' என்று சொல்லிவிட்டார்!

-'பாலி'. ஆதாரம்: ஃபிலிம் ஃபேர்

சேர்வை ஏறிட்டு விழித்தார் ''எங்கே மகன்?'' என்று கூவினார்.

''மகனைக் காணோமுங்க!... எல்லா நகை நட்டையும் பூட்டி, பட்டுச் சொக்காய், கால் சட்டையும் போட்டுப்புட்டு, காசுமாலை எடுத்தார உள்ளாறப் போய்த் திரும்பினேன். நம்ப தெய்வத்தைக் காணலீங்க! வீட்டைச் சுத்தித் தேடாத இடம் பாக்கி இல்லீங்க!'' என்று விம்மினாள். தாய் மனம் 'பொங்குவிரி காவிரியாக உருக்கொண்டதோ?'

''என்ன? நம்ப வினைதீர்த்தானை — நம்ப வினையைத் தீர்த்தவனைக் காணலையா?.... ஐயையோ!'' என்று கூக்குரல் பரப்பி, மண்டையில் அடித்துக் கொண்டார் நல்லதம்பி சேர்வை. பைத்தியம் போலே!

துடித்துப்போய்விட்ட சுப்பையா திசைக்குத் திசை ஆட்களை ஏவிவிட்டு, கொண்டை அவிழ்ந்தது கூடத் தெரியாமல் அவரும் விழுந்தடித்துக் கொண்டு ஓடத் தலைப்பட்டார்.

காலமும் ஓடியது.

வினைதீர்த்தானைத் தேடியா?



''எதுக்கப்பா மூத்த இருந்த முதலாளியை விட்டு விலகிட்டே?''

''என் கையெழுத்து மாதிரியே அவர் கையெழுத்துப் போடறார் சார்!''

கவர்க் கடிகாரம் எட்டு அடித்தது.

''ஐயையோ! எட்டு ஆயிடுச்சே! இன்னும் ஒன்னரை நாழிகைப் பொழுதுதானே இருக்கு காது குத்த!... காது குத்திக்க வேண்டிய எங்க மகனை — எங்க தெய்வத்தை இன்னமும் காணலையே!.... காளி ஆத்தா! என்ன விளையாட்டு இது?.... என்ன சோதனை இது?.... தாயே! எங்க வினைதீர்த்தானைக் கொண்டு வந்து சேர்த்துப்பிடு! பன்னயம் படைச்சுப் பாலபிஷேகம் செஞ்சுப்பிடுறேன், ஆத்தா!'' அலறித் தவித்து உருகிக் கொண்டிருந்தார் சேர்வை. பாசம் அவரைப் பைத்தியமாகவே அடித்து விட்டதோ?

'' தம்பி!''

தலையை உயர்த்தினார் நல்லதம்பி. சுப்பையாவின் தோளில் வினைதீர்க்க வந்தவனென்று வீற்றிருந்தான் பாலகன் வினைதீர்த்தான்.

உடல் உருக, உள்ளம் உருக, ''மகனே!'' என்று தாவி ஓடினார் நல்லதம்பிச் சேர்வை. ''அப்பாகிட்டே வாடா, கண்ணே! ராத்திரி அப்பாவோட டூ போட்டுட்டுப் போன மகனை இப்ப காணுமின்னதும் எனக்கு உசிரே போயிருச்சேடா!'' என்று தேம்பி அழுத வண்ணம் மகனை ஏந்தக் கைகளை விரித்தார்.

ஆனால், வினைதீர்த்தானோ புதிய உயிர் கொண்டு நல்ல மூச்சு விடத் தொடங்கிய தாய் வள்ளியம்மையைச் சரணடைந்தான்!

''எங்கேடா, கண்ணே இம்மா நேரம் போயிருந்தே?'' என்று விக்கலுக்கும் விம்மலுக்கும் ஊடே கேட்டாள் பெற்றவள்.

அன்னையின் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே, ''எனக்குப் பெண்டாட்டி பொறந்திருக்கான்னு நீ சொன்னே! அதைப் பார்க்கிறதுக்குப் போயிருந்தேனுக்கும்!'' என்றான் வினைதீர்த்தான், குதூகலத்துடன்.

''என்ன? உன் அம்மான் வீட்டுக்கா—நம்ப ஜன்ம வைரி வீட்டுக்கா நீ போயிருந்தே?'' கத்தி விட்டார் நல்லதம்பிச் சேர்வை.

''ஆமான்னு சொல்லு, ஆத்தா!.... எங்க அம்மானோடே நான் 'டூ' ஒண்ணும் போடலேன்னும் சொல்லு ஆத்தா! நாங்க இரண்டு பேரும் எப்பவுமே ராசிதான்னும் சொல்லிப்பிடு, ஆத்தா!''

ஐந்து வயதுப் பிள்ளையா பேசுகிறான் இப்படி?....

''தம்பி, தெய்வம் விளையாடுது!'' என்று உணர்ச்சிக் களிப்புடன் கூறினார் சுப்பையா.

நல்ல தம்பிச் சேர்வை உடலைச் சிலுப்பிக் கொண்டு தலையை நிமிர்த்தினார். ''ம்...சரி, சரி.... காரிலே பிள்ளையை ஏத்திக்கிட்டுக் குந்து. சுப நேரம் இன்னும் கொஞ்சம்தான் இருக்கு!'' என்று துரிதப்படுத்தினார்.

காளி தரிசனம் முடிந்தது!

இதோ, காது குத்து நடக்கப் போகிறது!

அப்போது, ஆவணத்தாங் கோட்டை கங்காணி மெல்ல எழுந்து, ''எங்க நல்ல தம்பி! அம்மான் வீட்டுச் சீர் வரலையாமே? அம்மான் சீர் வராமலா காது குத்து நடத்தப் போறீங்க?'' என்று விதி போல வினா விடுத்தார்.

பாவம், நல்ல தம்பிச் சேர்வை விதியைச் சாடத் தெம்பிழந்து அப்படியே சிலையாகி விட்டார்!....

அப்போது:

வாசலில் புதிய கொட்டு முழக்கு — மேள தாளம் கம்பீரமாகக் கேட்டது.

விரைந்து மீண்டார் கொண்டைக்காரச் சுப்பையா. அவரது உதடுகள் துடிதுடித்தன: ''தம்பி! விதியோட விளையாட்டு முடிஞ்சிருச்சு!.... இப்போ, தெய்வம் விளையாடுது!.... வள்ளியம்மை! உன் தம்பி சாமியப்பன் சேர்வைக்காரர் அம்மான் சீர் கொண்டாந்திருக்காரம்மா!''.

அவ்வளவுதான்!

வினைதீர்த்தான் விழாப் பந்தலில் நின்றபடி வானத்துக்கும் பூமிக்குமாகக் குதித்தான்: ''பலே! பலே!'' என்று கைகொட்டிச் சிரித்தான். உடனே தன்னுடைய தந்தையை—மீண்டும் சிலையாகிவிட்ட தன்னுடைய தந்தையை நெருங்கினான். ''அப்பா!..... அப்பா!.... இனி நீங்களும் நானும் ராசியாக்கும்!'' என்று சொல்லிவிட்டு விதி போல நமட்டுச் சிரிப்பை வெளியிட்டான்!

ஆம்; அவன் 'வினை தீர்த்தான்' அல்லவா?

# ஃப்ளோரைட் குறைந்தபட்சம் 50 வயது மட்டும் பற்களில் சொத்தை விழாமல் தடுக்கிறது

1961ல் சென்னைக் கல்லூரியில் நடத்திய ஆராய்ச்சி. ஆதாரம்: 'டென்டல் ஆர்ட்டிகிள்ஸ்' பக்கம் 305; இங்கிலாந்து ராயல் காலேஜ் ஆப் ஸர்ஜன்ஸ் ஆண்டு மலர், நவம்பர் 1969, தொகுதி 45 பாண்டு 5

## எனவேதான் பினகா பற்பசையில் ஃப்ளோரைட் சேர்த்துள்ளனர்

ஏனெனில் பினகா ஃப்ளோரைடில் உள்ள சோடியம்-மோனோ-ஃப்ளோரோ-ஃபாஸ்பேட் (SMFP) சொத்தை விழாமல் பற்களைப் பாதுகாப்பதுடன், பல் எனாமலைப் பலப்படுத்துகிறது. பாதகம் செய்யும் அமிலங்கள் வாயில் உருவாவதைத் தடுக்கிறது. பற்களின் அகால சிதைவைத் தவிர்க்கிறது. பினகா ஃப்ளோரைடை உபயோகம் செய்ய முக்கிய காரணங்கள் இவை. நீங்கு வருவதற்கு முன் காப்பளித்திடும் பற்பசை இவை.






பற்சிதைவு, வலிதரும் சொத்தை இவைகளுக்கெதிரான மும்முனைப் பாதுகாப்பு-பினகா ஃப்ளோரைட

# மலரே மலரே



கன்னத்தில் கொஞ்சம் பவுடர் இட்டு துடைத்தாயிற்று. பென்சிலால் புருவத்தை 'டச்' பண்ணியாயிற்று.

பச்சை ஸ்கர்ட்... கொஞ்சம் குட்டையாகவே தைத்திருக்கலாம். டெய்லருக்கு அப்பாவிடம் பயம். மாறி வரும் இந்த நாகரிக உலகத்தில் முழங்காலளவுக்கா ஸ்கர்ட் போடுவார்கள்? டாமிட். காலிலே பச்சை ஸ்டாகின்ஸ்! மாட்டியாயிற்று. ஐயோ! என் பச்சை ஸ்கார்ப் எங்கே? தேடுமளவுக்குப் பொறுமை கிடையாது. வெளிர் நீல ஸ்கார்ப்பை எடுத்து அவசர அவசரமாகக் கழுத்தைச் சுற்றி வந்து பக்கவாட்டில் ஒரு முடி போட்டுக் கொண்டேன்.

தேநீர் விருந்துக்கு நேரமாகிறது. கார் எங்கே?

ஷாம்பூவினால் மழமழ வென்றிருந்த குட்டைக் கூந்தலை ஸ்ப்ரே செய்து அடக்கியவாறு ஜன்னலைத் திறந்து பார்க்கிறேன்.

கோடைக்கானலின் பனிப் படலத்துக்கு அப்பால்தெரிவது மலர்த்தோட்டம். மலர்கள்... மலர்கள்.... மலர்கள்....! என் உதடுகள் சிணுங்கின. அம்மா ஒரு பைத்தியம். சினிமாவுக்கே போகாதவளைத் திருமால் பெருமைக்குக் கூட்டிப் போய்விட்டேன். சிவாஜியின் நடிப்பை ரசித்ததோடு நான் வந்து விட்டேன். ஆனால் அம்மா? அந்த மலர்த் தோட்டத்தை 'அப்படியே மனத்தில் படம் பிடித்து வந்து வண்ண வண்ணமாக மலர்த் தோட்டம் போட்டு விட்டாள்.

மலர்கள்! ஐ ஹேட் இட். பூ வாசனையே எனக்குப் பிடிக்காது. அலர்ஜி. ஈவ்னிங் - இன் - பாரீஸ் சென்டை விடவா மலருக்கு மணம்?

ஜன்னலில் இரண்டு கைகளையும் பதித்தவாறு எக்கிப் பார்க்கிறேன். ஊஹூம். கார் வரவில்லை.

கார் வருகிற வரை என்னைப் பற்றிச் சொல்கிறேனே.

என் டிரஸ்ஸைப் பார்த்து என்னை ஏதோ 'ரோஸ் மேரி பேபி' என்று நினைத்துவிடாதீர்கள். என் பெயர் கமலி ஐயர். ஜாதிப் பெயர் கூடாதாம். காந்தி ஐயா சொல்லியிருக்கிறார். ஆனால் பம்பாயில் 'ஐயர்' என்று பெயர் வைத்துக் கொள்வது இப்போதெல்லாம் பாஷனும். படித்தேன்.

பெயரளவில்தான் நான் ஐயரே தவிர கட்டுப்பெட்டியல்ல. அதெல்லாம் என் அம்மாவோடு நிற்கட்டும். நான் ஸோஃபிஸ்டிகேடட். அண்ணா போய் வந்தாரே யேல் பல்கலைக் கழகம், அங்கு மூன்று வருஷம் மனோதத்துவம் படித்து வந்தேன். என் பிரண்ட் ஒருத்தி மிஸ் ஹூவாட்டா கஸ்பாலி கிரேஸியா (சத்தியமாகச் சொல்லுங்கள். பெயரை எழுத்துக் கூட்டாமலா படித்தீர்கள்?) ஸோஃபிஸ்டிகேடட் லைஃபைப் பற்றி எனக்குச் சொல்லித் தந்தவளே அவள்தான். ஊர் திரும்பியபோது அப்பா அசந்து போனார். அம்மாதான் கடா முடா என்றாள். நானா கேட்பேன்?

மினி ஸ்கர்ட் போட்டு நடப்பது என்ன கஷ்டமா யிருக்கிறது. புடவை என்ன புடவை? லொட் லொட் என்று தடுக்கிக்கொண்டு.

அப்பாடா. ஒரு வழியாகக் கார் வந்து விட்டது. சமயம் பார்த்துக் காரைக் கொண்டு போனதற்காக அம்மாவிடம் சண்டை பிடிக்க இறங்கினேன்.

"கோயிலுக்குப் போனேன்டி குழந்தே. அந்தக் குறிஞ்சி ஆண்டவன் தயவு இருந்தா இந்த வருஷமே...." என்று அம்மா ஆரம்பித்ததும் ஓடிப் போய்க் காரில் தொத்திக் கொண்டு, "சீக்கிரம், சீக்கிரம்" என்று பதறினேன்.

"இந்தாடி, இந்தாடி!" என்ற அம்மாவின் இரைச்சல் காதை எட்டும் போது வண்டி கேட்டைத் தாண்டியாயிற்று.

வம்பு ! 'பிரசாதம்' என்று குங்குமமோ, விபூதியோ பூசி விடுவாளே அம்மா. அப்புறம் அந்தக் கவிதா என்னைப் பார்த்ததுமே, 'வாங்கோ மாமி, வாங்கோ' என்று கிண்டல் பண்ணுவாளே !

தேநீர் விருந்தில் எனக்காக அதிசயம் காத்திருந்தது.

என்னவா ? சொல்ல மாட்டேன் ! பொறுமையாயிருங்கள்.

காரிலிருந்து இறங்கிய அவன் சிரித்தபோது கீழ் வரிசைப் பற்கள் பளிச்சிட்டன.

''சுமதி, மீட் மிஸ்டர் வீரராகவன்'' என்று கவிதா அறிமுகப்படுத்திய போது சிரிப்புடன் கைநீட்டினேன். அவனும் சிரிப்புடன்.... (சிகரெட் பிடிக்க மாட்டான் போலிருக்கிறது) உதடுகள் கறுப்பாயில்லாமல் ரத்தபுஷ்டியுடனேயே இருந்தன) அவனது கைகுலுக்கலில் ஏதோ ரகஸிய அழுத்தத்தை உணர்ந்ததும்,




கவிதாவின் அப்பா (நல்ல மிதப்பிலிருந்தார்) 'மூாம்மா' என்று வரவேற்ற அழகை ரஸித்தவாறு உள்ளே போனேன். கவிதா இருக்கிறளே அவள் ஒரு இடியட். 'ஹாய்' என்று நெருங்கிய என்னை இப்படியா இடித்துப் புடைத்துக் கொண்டு வெளியே ஓடுவாள் ?

கையை உருவிக் கொண்டு நிமிர்ந்து அப்பால் நகர்ந்து நடந்து போய்விட்டேன். எப்போதுமே என் அழகிலே எனக்கொரு தனிக் கர்வம்.

தேநீருக்குப் போகும் போது ஒரு ரோஜாவை நீட்டினன். மறுத்தேன். ''ஏன் பூ என்றல் பிடிக்காதா?'' என்ருன் வியப்புடன்.

''சுத்தமாக'' என்றவள், நடந்து போய்ச் சிநேகிதிகளுடன் அமர்ந்து விட்டேன். பிஸ்கெட்டைக் கடித்தவாறு நான் பார்த்த போது, தன் கோட்டில் செருகி யிருந்த ரோஜாவை எடுத்துத் தூர எறிந்துவிட்டான்.

எனக்காக; என்னைத் திருப்திப்படுத்துவதற்காக.

உதட்டைச் சுழித்து ரகசியமாகச் சிரிக்கிறேன்.

அவர் மகா குறும்புக்காரர். (என்ன இடீர் மரியாதை என்கிறீர்களா? அன்று அவன் யாரோ. ஆனால் இன்று என்னவராயிற்றே!)

முதல் பார்வையிலேயே அப்பா அம்மாவுக்குப் பிடித்து விட்டது. ''மஹாவிஷ்ணு மாதிரியிருக்கார்'' என்று அம்மா வர்ணித்தாள். நல்ல வேளை... ரோஜா மாலையோ வடை மாலையோ சாத்திக் கற்பூரம் காட்டிக் கோரம் பண்ணாமல் விட்டாளே!

அவர் ஒரு ஐ. ஏ. எஸ்! கார்..... பங்களா, க்ளப் பார்ட்டி ஸோஃபிஸ்டிகேடட் வாழ்க்கை. போதாதா எனக்கு? போட்டு விட்டேன் கை எழுத்தை. (பதிவுத் திருமணம் தான். அம்மாவுக்குக் குறை. இருக்கட்டுமே, அதற்காக? ஜடை பின்னி, கழுத்து நோகக் குனிந்திருந்து, புகையிலே மூச்சுத் திண்டாடி. அம்மாடியோ! வேண்டாம் சுவாமி. முக்கியமாக மலர் மாலை? மலர் எனக்கு அலர்ஜி.

என்னவருடைய கல்லூரித் தோழிகள் கோடைக்கானலுக்கு வந்த போது எங்களுடன்தான் தங்கியிருந்தார்கள். அத்தனையும் பீட்டில்ஸ் தலைகள். அம்மா ஆளுக்கொரு முழம் மல்லிகைப் பூச்சரம் தந்த போது ஒருத்தி பந்தாடினாள். இன்னொருத்தி வாசனை பார்த்துக் கையிலே கட்டிக் கொண்டாள். இன்னொருத்தி டம்பப் பையில் போட்டு மூடிக் கொண்டாள்.

''லட்சணமா ஒருத்தியாவது தலையிலே வைச்சுக்க மாட்டீங்களா?'' என்று அம்மா ஏங்கினாள்.

சென்னைக்கு வந்துவிட்ட ஒரு நாள் பீச்சுக்கு போனோம். கிழவி ஒருத்தி கூடைப் பூவுடன் கெஞ்சு கெஞ்சென்று கெஞ்சினாள். ''போ, போ.....!'' என்று விரட்டினேன். அது ஸோஃபிஸ்டிகேடட் பாட்டி. பூ வைச்சுக் காது'' என்ற எங்களவர் அந்தக் கிழவிக்கு 'ஸோஃபிஸ்டிகேடட்' என்று சொல்லிக் கொடுக்க படாத பாடு பட்டார். கடைசி வரை ''லோபி இது... லோபி இது'' என்றே தான் அந்தக் கிழவி சொல்லிக் கொண்டிருந்தது. விடாப் பிடியாக அவள் விற்று விட்டுப் போன பூச்சரத்தை மணலில் வீசி எறிந்தேன்.

கட்டெரிப்பது போல் பார்த்தது கிழவி. 'சுமங்கலிப் பொண்ணு, வெள்ளிக்கிழமையும் அதுவுமா பூவை விட்டெறியறியே.....'' என்று குனிந்து பூவை எடுத்ததோடு காசையும் என் கையிலே திணித்துவிட்டுப் போய் விட்டாள்.

ரோஷக்காரக் கிழவிதான்.

எதிர்பாராத சந்திப்பு!

''சாந்திதானேடி நீ?'' என்று கேட்டேன். பஸ்ஸுக்காகக் காத்திருந்த அவள், என் பழைய கிளாஸ்மேட். ஸ்கூலில் மச்சருக்குத் தெரியாமல் ஒரு நாள்.... சரி சரி, அந்தக் கதை இப்ப ஏன்?

கட்டுப்பெட்டி. வயிறு கனத்துக் கொண்டிருந்தது. நொடிக்கொரு பெருமூச்சு.... வெளுத்த அந்த முகத்திலும் ஏதோ கவர்ச்சி.

'அல்ட்ரா — மாடர்ன்' அலங்காரத்துக்குப் பின்னே ஒளிந்திருக்கும் என்னைக் கண்டு பிடிப்பது அவ்வளவு சுலபமாயிருக்கவில்லை அவளுக்கு. தயக்கத்துடன், ''சுமதியா?'' என்றாள்.

''ஆமா!'' கார்க் கதவைத் திறந்தேன். ''வாடி உன்னை டிராப் பண்றேன்.''

சிரமத்துடன் ஏறி அமர்ந்தாள் அவள்.

நேரே ட்ரைவ் — இன் — ரெஸ்டாரெண்டுக்குப் போய் டிபன் சாப்பிட்டோம். வளவளவென்று நான்தான் பேசினேன். அவள் தயக்கத்துடன் ஏதோ கேட்க நினைப்பது போலத் தவிப்புடன் பேசினாள். பலதரம் விசாரித்த பின் சொன்னாள். ''டியே, தப்பா நினைக்காதே. எனக்குப் பாதம் ஹல்வா வாங்கித் தர்றியா?''

விநோதமாகத் திரும்பிப் பார்த்தேன். காப்பி சாப்பிட்டான பிறகு பாதாம் அல்வா? அதிலும் ஆச்சரியம் அந்தக் காலத்திலிருந்தே அவளுக்கு இனிப்பென்றால் பிடிக்காது. ஸ்வீட்டைப் பார்த்தாலே அவள் முகம் சொத்தைக் கடலையை மென்று விட்டது போலப் போகும். ஆனால் இப்போது?

''பேறுகாலத்திலே ஆசைப்படறதை நிறைவேத்தி வைக்கணும்னு சொல்லுவாங்க. ரொம்ப நாளாவே பாதாம் அல்வா சாப்பிடணும் போல ஆசை. அவர் வருமானம் குறைச்சல். பிரசவச் செலவை நினைச்சே நடுங்குகிறார். கேட்க முடியல்லே. நீ பிரண்ட். கேட்டுட்டேன்.''

ஒன்றுக்கு நாலா வாங்கித் தந்தேன்.

அவள் வீடு? ஒண்டுக் குடித்தனம். உள்ளே கூப்பிட்டாள். அங்கிருந்த கட்டுப்பெட்டிகள். என்னையும், என் டிரஸ்ஸையும் பார்த்த பார்வை எனக்கு எரிச்சலூட்டியது. ''இப்ப வேண்டாம், இன்னொரு நாள் ஆகட்டும்'' என்றேன்.

''பதினாறும் தேதி வாயேன். எனக்கு வளைகாப்பு நடத்தப் போறாங்க. வருவியா?''

''வளைகாப்புன்னு என்ன?'' (சத்தியமாக எனக்குத் தெரியாது. அதற்காக அப்படி ஒரு விசித்திர பார்வை பார்க்க வேண்டுமோ?)

''கை நிறையக் கண்ணாடி வளையல் அடுக்கு வாங்க. தலை நிறையக் கனகாம்பரம், சம்பங்கி, ஜாதி மல்லி, ரோஜா, தாழம்பூ வைச்சு ஜடை பின்னுவாங்க.''

''பூ!'' என் உதடுகள் சிணுங்கின. '' ஆகட்டும், பார்க்கலாம்.''

''அப்படிச் சொல்லாதே. நீ அவசியம் வரணும்.'' அவள் கொஞ்சினாள். '' நீ வந்தாத்தான் நான் பூ முடிப்பேன்.''

'.அப்ப வேண்டாம். பெஸ்ட் இங்க். பூ வைச்சுக்காதே!'' என்று சொன்னவர் திடுக்கிட்டு விட்டேன். அப்படியொரு அறை விழும் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை.

''அடிப் பாவி!'' அவள் சீறினாள். ''இந்த நிலையிலே என்னைப் பார்த்து 'பூ முடிக்காதே'ன்னு சொல்றே? அதிகப் பிரசங்கி. உன்னோட வந்ததே தப்பு. அதிலேயும் உன்னைப் போய் வளைகாப்பு சீமந்தத்துக்குக் கூப்பிட்டேனே, அது அறைவிடப் பெரிய தப்பு.''

## அபாய அறிவிப்புச் சங்கிலியை
## தவறுதலாக உபயோகிப்பது பெருங்குற்றம்

எதிர்பாராது ஏற்படும் ஆபத்துக் காலங்களில், அவசரமாக உபயோகப் படுத்துவதற்காகவே தான், அபாய அறிவிப்புச் சங்கிலிகள் பொருத்தப் பட்டுள்ளன. அவசியமில்லாது, அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுப் பதின் மூலம், நூற்றுக்கணக்கான பிரயாணிகள் அதிகமான அசௌகரி யத்துக்கு உள்ளாகின்றனர். இப்படி அனாவசியமாக அபாயச் சங்கிலியை இழுப்பதினால், அந்த ரயில் சரியாக நேரப்படி ஓடுவது தடைப்படுவ தோடு, மற்ற ரயில்கள் நேரப்படி ஓடுவதும் பாதிக்கப்படுகிறது. அபாயச் சங்கிலியை இழுக்கும் நபர் அநேகமாக உண்மையான பிரயாணியாக இருப்பதில்லை; மேலும் பிடிபடாமல் தப்பி ஓடி விடுகிறார். ஆனால், இப்படிப்பட்டவரின் செய்கையால் மற்றவர்கள் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. இப்படி அடிக்கடி அவசியமில்லாது, அபாயச் சங்கிலியை இழுப்பதைத் தடுக்கும் பொருட்டு, பூரணமாக ஒத்துழைக்க வேண்டுமென பொதுமக்களை ரயில்வேக்கள் கோருகின்றன. காரணமின்றி அபாயச் சங்கிலியை இழுப்பது தண்டனைக்குரிய குற்றமாகும்.

(தென்னிந்திய ரெயில்வே வெளியீடு)

# என்ன அருமையான அறுசுவை விருந்து! ஆனால் இதில் கூட போதுமான வைட்டமின்களும் தாது உப்புக்களும் இல்லை

உங்கள் சரீரத்தின் சக்தி, நோயெதிர்க்கும் திறன், வலிமை, இவற்றைப் பராமரிக்க சமசத்துணவு தேவை. பெரும்பான்மையோர் ஆரோக்கியத்திற்கு எது தேவையோ அதைச் சாப்பிடுவதில்லை—போதாக்குறைக்கு சீதோஷ்ண நிலையும் அயர்ச்சியை அளிக்கிறது.

ஆகவேதான் 'விடாமினெட்ஸ்' ∴போர்டே ஒரு வரப்பிரசாதமாக இருக்கிறது. ஒவ்வொரு மாத்திரையிலும் ஆரோக்கியத்திற்கு அத்தியாவசியமான சத்துப்பொருள்கள் உள்ளன. 11 வைட்டமின்களும் 5 தாது உப்புகளும் அடங்கியுள்ளன ஒருநாளைக்கு ஒரு மாத்திரை, உட்கொண்டாலே அன்றாடத் தேவையான சத்துக்கள் கிடைத்துவிடும்.




உங்கள் மருந்து வியாபாரியிடமிருந்து இன்றே 'விடாமினெட்ஸ்' ∴போர்டே வாங்குங்கள். உங்கள் குழந்தைகளுக்கும் அது தேவை.

'விடாமினெட்ஸ்' ∴போர்டே ஜீவ சத்து நிறைந்த மின்னும் சிவப்பு மாத்திரைகள்.

**'விடாமினெட்ஸ்' ஃபோர்டே 'ரோஷ்'**

டிரேட் மார்க்

'நாளொன்றுக்கு 15 பைசாவிலும் குறைந்த செலவில் ஆரோக்கியமும் சக்தியும் பெறுங்கள்'

'ரோஷ்' தயாரிப்பு

VT-22...

போய் விட்டாள்.

எவ்வளவு நேரம் சிலை போல அமர்ந்திருந்தேனோ அந்தக் கட்டுப்பெட்டிகள் என்னை ஒரு தினுசாகப் பார்க்கவே க்ளட்சை விடுவித்து ஆக்ஸிலேட்டரை மிதித்தேன். கார் குபீரென்று புறப்பட்டது.

மனத்திலே ஒரு நெருடல். புள்ளியாகத் தோன்றி வளர்ந்து விசுவரூபமெடுத்தது ஒரு கேள்வி. ''பெண்ணுக்கும் மலருக்கும் அப்படி என்ன உறவு ?''

வீட்டுக்குப் போன போது....

தலை சுற்றல். அலுப்பாயிருந்தது. காலுக்குக் கீழே பூமி நழுவுவது போன்ற பிரமை. அடிவயிற்றிலே ஏதோ மாறுதல். சோர்வுடன் சோபாவில் சாய்ந்தேன்.

பானு வந்தாள். என்னவர் செகரட்டரி அவள். ''என்னம்மா? என்ன?'' என்று பதறி விட்டாள்.

''ஃபானை போடு, தலையைச் சுத்தறது.''

உற்றுப் பார்த்தாள். ''சுத்துதா?'' என்றாள் சிரிப்புடன்.

''இளித்தாயோ அறைவேன். போடி, டாக்டர் சரவணனுக்கு ஃபோன் பண்ணு.''

''டாக்டர் வரவேண்டிய கேஸ் இல்லேம்மா இது.'' மீண்டும் இளித்தாள். ''டாக்டரம்மா கேஸ்.''

உண்மைதான். நான் தாயாகப் போகிறேன். செய்தி தெரிந்ததும் ஏனோ.... மலர்களின் ஞாபகம்தான் வந்தது. அந்த சாந்தி சொன்னது நினைவுக்கு வந்தது. ''கனகாம்பரம், சம்பங்கி, ஜாதிமல்லி, ரோஜா, — தாழம்பூ வைச்சு ஜடை பின்னுவாங்க.''

இனம் புரியாத ஓர் ஏக்கம் வந்து நெஞ்சைக் கவ்வியது.

கோடைக்கானலிலிருந்து அம்மா வந்து சேர்ந்தாள். ''என் ராஜாத்தி'' என்று திருஷ்டி கழித்தாள்.

என்னையும் மீறி ஏதோ வெட்கம் அழுத்தியது. ''அம்மா, எனக்கெப்ப அம்மா சீமந்தம் பண்ணுவாங்க?'' அம்மா திறந்த வாய் மூடாது கேட்டுக் கொண்டிருந்தாள். ''கை நிறையக் கண்ணாடி வளையல் போடணும். தலை நிறைய ஜடை பின்னணும். சம்பங்கி, கனகாம்பரம், தாழம்பூ, குண்டு மல்லி, ரோஜாப்பூ...''

அம்மாவினால் நம்ப முடியவில்லை. ''செய்யலாம்டி கண்ணு செய்யலாம். எட்டாவது மாசம்தான் சீமந்தம் பண்ணுவாங்க. அதுக்குள்ளே ஓட்ட வெட்டியிருக்கியே அதுவும் கூடப் புசு புசுன்னு வளர்ந்திடும். நானே என் கையாலேயே ஜடை பின்னி....

''சம்பங்கி?'' ஆவலுடன் கேட்டேன்.

''நிச்சயம்.''

''குண்டுமல்லி நிறைய வேணும்.''

''ஆகட்டும்டி கண்ணு.''

''நம்ம தோட்டத்து ரோஜாதான் வரணும்.''

''கூடை கூடையாய் வரும்.'' அம்மா உள்ளே போய் விட்டாள். நான் கனவில் ஆழ்ந்தேன்.

மலர்கள்! மலர்கள்! மலர்கள்!

ஆவலுடன் எதிர்பார்த்த அந்த நாளும் வந்தது.

நீராடிவிட்டு, மஞ்சள் பூசி, அழகுபடுத்திக் கொண்டேன்.

ஸ்பெஷலிஸ்டாம். யாரோ ஒரு செட்டியார் அம்மாள் வந்து தலையில் பூ முடித்தாள்.

பின்னலை முன்னால் மார்பிலே தவழவிட்டு முகத்தைப் புதைத்தேன். சுகமான மல்லிகை மணம்! ரோஜாவின் சுகந்தம், தாழம்பூவின் மென்மையான உறுத்தல். பின்னந் தலையிலே இன்பமானதொரு பாரம். பட்டுப் புடவை சரசரக்க எழுந்து, கண்ணாடி வளை கலகலக்க நடந்து மாடி இறங்கினேன். பாதி மாடி இறங்கியதும்தான் கவனித்தேன்.

அம்மா, மாமியார், பானு, வேலைக்காரர்கள் அத்தனை பேர் இருந்தும்.... ஏன் இப்படி மௌனம்.....? ஏன் வீடு கலகலப்பாயில்லை ? ஏன் எல்லோரும் முகத்தைத் திருப்பிக் கொள்ளுகிறார்கள் ? அம்மாவின் கண்கள்

---

ஐக்கிய அமெரிக்காவின் அரசியல் சாஸனத்தைத் தயாரித்த ஃபிலடெல்பியா கன்வென்ஷன் முடிந்து பெஞ்சமின் ஃபிராங்க்ளின் வெளியே வந்தார். அப்போது அங்கே காத்திருந்த ஒரு பெண்மணி ''எத்தகைய அரசியல் அமைப்பை உருவாக்கி யிருக்கிறீர்கள் ?'' என்று அவரைக் கேட்டாள். ''அம்மணி! ஒரு குடியரசை உங்களுக்கு வழங்கியிருக்கிறோம் — அதாவது அதைப் பறிபோகாமல் உங்களால் பாது காத்துக் கொள்ள முடியுமானால்'' என்று ஃபிராங்க்ளின் பதிலளித்தார்.



சுதந்திரம் என்பது அரசியல் சாஸனங்களை மட்டும் சார்ந்ததல்ல; சுதந்திரமாக இருக்க வேண்டும் என்ற இச்சா சக்தி மக்களிடம் எந்த அளவில் செயல்படுகிறதோ அந்த அளவில்தான் சுதந்திரமும் நிலைத்திருக்கும். தகவல்: டி. எஸ். சீதாராமன்

---

பாதி செருகி நிற்க.... ஏன் தள்ளாடுகிறாள் ? டெலிபோனைப் பிடித்து நின்ற மாமா ஏன் சிலையாகி விட்டார் ?

வாசலில் கலகலப்பு. ஓசையின்றி வந்து நின்ற வண்டியிலிருந்து 'அவனை' இல்லையில்லை 'அவரை'...அதுவுமில்லை, 'அதை'க் கொண்டு வந்து நடு ஹாலில் படுக்க வைக்கிறார்கள். ஏறி இறங்காத மார்பு....சலனமற்ற விழிகள்.

''ஆக்ஸிடெண்ட்... போஸ்ட் மார்ட்டம்'' ஏதேதோ பேச்சு. என் காதில்விழவில்லை. என் காதிலே விழுவதெல்லாம் சிரிப்பு. மலர்களின் 'ஹோ' என்ற சிரிப்பு. தெளிவாகக் கேட்கிறது அதன் பேச்சு.

''வாழ்நாளெல்லாம் எங்களை 'ரிஜக்ட்' செய்தாயல்லவா? இப்போது நாங்கள் உன்னை 'ரிஜக்ட்' பண்ணி விட்டோம்!''

நின்றேன். நின்று கொண்டேயிருக்கிறேன்.



# காவேரித் தகராறு

அன்று தமிழ் நாட்டுச் சட்ட சபையின் விசேஷக் கூட்டம். எல்லா அங்கத்தினர்களும் மிக்க பரபரப்புடன்காணப் பட்டார்கள். ஏதோ ஒரு முக்கியமான விஷயத்தை விவாதிக்க எல்லாரும் கூடியிருந்தது போலப் பட்டது. எல்லாரும் அவரவர்கள் இருக்கையில் அமர்ந்து விட்டார்கள். சட்ட சபைத் தலைவரும் கூட வந்து விட்டார். ஆனால் முதலமைச்சரைத்தான் காணவில்லை!

''முதலமைச்சர் இன்னும் வரக்காணுமே! என்னமோ, ஏதோ!'' என்று எல்லாரும் கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில் முதலமைச்சர் வெகு வேகமாக உள்ளே நுழைந்தார். தலைவரையும், அங்கத்தினர்களையும் பார்த்து, ''தாமதமாக வந்ததற்கு மன்னிக்க வேண்டும். நான் பிரதமமந்திரியோடு



டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தேன்.. அதனால் தாமதமாகி விட்டது'' என்றார்.

''காயா, பழமா?'' என்று கேட்டார் ஓர் அங்கத்தினர்.

''காய்தான். தமிழ் நாடு சொன்னதை என்றுதான் டில்லி கேட்டிருக்கிறது!'' என்றார் முதலமைச்சர்.

பின்னர் அவர் பேச ஆரம்பித்தார்.

''மாண்பு மிக்க தலைவர் அவர்களே! உறுப்பினர்களே! ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றி முடிவு எடுப்பதற்காக நாம் இன்று கூடியுள்ளோம்.

''காவேரி நீர் சம்பந்தமாக மைசூர் அரசாங்கம் நடந்து கொள்ளும் போக்கைக் கண்டித்து நான் பல கூட்டங்களில் பேசியாகிவிட்டது. டில்லிக்குப் பல கடிதங்கள் எழுதியாகிவிட்டது. டில்லிக்குப் பல அமைச்சர்களை அனுப்பியாகி விட்டது. கடைசியில், டெலிபோனிலும் பல தடவைகள் பேசியாகிவிட்டது. இந்தியாவிலேயே என்னுடைய டெலிபோன் பில்தான் மிகவும் அதிகம் என்று எதிர்க் கட்சித் தலைவர் பட்ஜெட் விவாதத்தின்போது குற்றம் சாட்டினாரே, அதற்கு இதுதான் காரணம். இருந்தும் டில்லியும் சரி, மைசூரும் சரி, நாம் சொல்வதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் அவர்கள் போக்கிலேயே போய்க் கொண்டிருக்கிறார்கள்.

''தமிழ் நாட்டின் தானியக் களஞ்சியமாக விளங்கும் தஞ்சாவூர் மாவட்டத்துக்கு எத்தனை பேராபத்து விளையவிருக்கிறது என்று நமது பொறியியல் வல்லுநர்கள் மைசூர் அரசாங்கத்துக்கும் சரி, மத்திய அரசாங்கத்துக்கும் சரி, எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் அவர்கள் பேசாமல் இருக்கிறார்கள்.''

''ஆமாம், மைசூர் அரசாங்கம் எடுக்கவேண்டிய திட்டமான நடவடிக்கைகள் என்னவென்று அவர்களுக்கு விளக்க

## சிந்திப்பீர் செயல்படுவீர்

வேம்பை இராசன்

அண்ணா வழியில் செல்லுவதாய்
அழகாய்ச் சொல்லும் அமைச்சர்களே,
மதுவைக் குடிக்க வழி செய்து
மாண்பைக் கெடுக்கச் செய்யாதீர்.

பணத்தை எண்ணித் தமிழ் நாட்டின்
பண்பைக் கெடுக்க முனையாதீர்
விரும்பிய கிடைக்கும் என்றெண்ணி
வள்ளுவன் குறளை மறக்காதீர்.

குடித்து மகிழ்வான் குடிகாரன்
கூழுக்கு அழுவார் குடும்பத்தார்
அடித்து நொறுக்குவான் ஆண்பிள்ளை
அழுது புலம்புவாள் பெண்டாட்டி.

மனிதனை மிருகம் ஆக்குகின்ற
மதியைக் கெடுக்கும் மது வேண்டாம்
குடும்பத்தில் குழப்பம் செய்கின்ற
குடியைக் கெடுக்கும் குடி வேண்டாம்.

முதலில் கள்ளை ஒழித்திட்ட
முத்தமிழ் நாட்டில் இனி மீண்டும்
கள்ளுக் கடையைத் திறக்காதீர்
காந்தியின் கொள்கையை மறக்காதீர்.

கன்னித்தமிழன் இனி மீண்டும்
கள்ளைக் குடித்துக் கெடலாமா?
கள்ளுக் கடைகளை ஏலத்தில்
கருணாநிதியே விடலாமா?

தாழ்ந்த தமிழன் முன்னேற
தகுந்த திட்டம் தீட்டாமல்
தரத்தைக் கெடுக்கும் மதுக்கடையை
திறக்க எண்ணம் கொள்ளாதீர்

சிந்தனை செய்து பாருங்கள்
செந்தமிழ் நாட்டை ஆள்வோரே!
ஏழையின் சிரிப்பில் இறைவனை நீர்
எப்படிக் காணப் போகின்றீர்?

மாகக் கன்னடத்தில் எழுதி அனுப்புவது தானே!'' என்று எதிர்க் கட்சித் தலைவர் கேட்டார்.

''அதையும் செய்தாகி விட்டது. நான் தமிழில் எழுதியதை நமது அரசாங்க மொழி பெயர்ப்பாளரைக் கொண்டு, கன்னடத்தில் மொழிபெயர்த்து அனுப்பி வைத்தேன்.''

''அதற்கு பதில் அனுப்பினார்களா?''

''இன்றுதான் அனுப்பினார்கள்.''

''என்ன பதில் அனுப்பினார்கள்?''

''நீவு ஹேளித ஹாகே நாவு கேளுவ தில்லா.''

''அப்படியென்றால்?'' என்று எல்லாரும் ஒரே மூச்சில் கேட்டனர்.

''அது கன்னடம். 'நீங்கள் சொல்கிறபடி நாங்கள் கேட்கப் போவதில்லை' என்று அதற்கு அர்த்தம்.''

''அப்படியா மைசூர் அரசாங்கம் சொல்லு கிறது? கேளுவதில்லாவா? கேட்கப்போகிற தில்லையா? அதையும் பார்த்து விடுவோம்! ஆமாம், நீங்கள் என்ன கேட்டிருந்தீர்கள்?'' என்று கேட்டார் எதிர்க் கட்சித் தலைவர்.

''காவேரியின் நீர் நம் பக்கம் அதிகப்படி வராதிருக்க, அவர்கள் குறைந்தது இன்னும் பத்து அணைக்கட்டுகளாவது உடனே கட்ட ஆரம்பிக்க வேண்டும். நிறைய வடிகால்களை அமைக்க வேண்டும். 1924ல் நாம் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி தமிழ் நாட்டுக்கு எவ்வளவு நீர் விட வேண்டுமோ, அவ்வளவு நீர்தான் விடவேண்டும். அதற்கு மேல் ஒரு பொட்டுத் தண்ணீர் கூட விடக் கூடாது என்று கேட்டிருந்தேன்.''

இதைக் கேட்டு எதிர்க் கட்சித் தலைவர் சிரித்தார்.

''எதற்காகச் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார் முதலமைச்சர்.

''இல்லை, ஐம்பது வருடங்களுக்கு முன்னர், அதாவது 1971ல், இதே சட்ட சபையில் நடந்த நடவடிக்கைகளைப் பற்றி, சமீபத்தில் தான் பழைய சட்ட சபை நடவடிக்கை ஏடு களில் படித்தேன். அப்பொழுது மைசூர் அர சாங்கம் ஹேமாவதியில் கட்டிக் கொண்டிருந்த ஒரே ஒரு அணைக்கட்டைத் 'தடுப்பதற்குத் தமிழ் நாடு எத்தனை முயற்சி எடுத்துக் கொண்டது என்பது ஞாபகத்துக்கு வந்தது. அப்பொழுது 'அணைக்கட்டு கட்டாதே' என்று சொன்னோம். இப்பொழுது 'குறைந்தது பத்து அணைக்கட்டுக்களாவது கட்டிக் கொள் ளக்கூடாதா' என்று கேட்கிறோம். அதை நினைத்துத்தான் சிரித்தேன்.''

இதற்கு முதலமைச்சர் சொன்னார்:

''அதுதான் கால வித்தியாசம். தலைவிதி என்கிற பொருளில் இச் சொற்றொடரை நான் உபயோகிக்கவில்லை. அந்தக் காலத்துக்கும் இந்தக் காலத்துக்கும் உள்ள வித்தியாசத் தைச் சொன்னேன். அன்று காவிரியில் தண் ணீர் வராதா என்று நாம் தவித்துக்கொண் டிருந்தோம். இன்று கங்கையும், காவிரியும் இணைந்து விட்டதால், அதுவும் மைசூர் ராஜ்யம் வழியாக இணைக்கப்பட்டு விட்ட தால், கங்கையில் பெருக்கு ஏற்படும்போ தெல்லாம் தஞ்சாவூர் மாவட்டம் வெள்ளக் காடாகி விடுகிறது.''

''கங்கையும் காவேரியும் இணைவதை நாம் அன்றே எதிர்த்திருக்க வேண்டும்'' என்றார் எதிர்க் கட்சித் தலைவர். தொடர்ந்து, ''நாம் மைசூரை மட்டும் அணைக்கட்டுகள் நிறையக் கட்டுங்கள் என்று சொல்லிப் பயனில்லை. கங்கை நதி பாயும் எல்லா ராஜ்யங்களையும் அணைக்கட்டுக்கள் கட்ட வேண்டும் என்று கேட்டுக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் கோர்ட்டுக்குப் போவோம் என்று பயமுறுத்த வேண்டும்'' என்று சொன்னார் எதிர்க் கட்சித் தலைவர்.

''ஆமாம், 1971ல் தமிழக அரசு கோர்ட் டுக்குப் போச்சே, என்ன ஆயிற்று?'' என்று கேட்டார் ஓர் அங்கத்தினர்.

''அதை ஏன் கேட்கிறீர்கள்! அப்பொழுது நடந்ததைச் சொல்லுகிறேன், கேளுங்கள்'' என்று ஆரம்பித்தார் முதலமைச்சர். ஆனால் அதற்கு மேல் முதலமைச்சர் பேசவில்லை. அன்றையக் கூட்டம் முடிவுற்றது என்று தெரிவிக்கும் மணியை அடித்துவிட்டார் சபைத் தலைவர்.

டெலிபோன் மணி சப்தத்தைக்கேட்டுத் திரு கருணாநிதி விழித்துக் கொண்டார். 'இத் தனையும் கனவா?' என்று ஆச்சரியப்பட்டார். கங்கையும் காவேரியும் இணைந்தாலும் காவே ரித் தகராறுதானா என்று நினைத்தார்!

# பிரத்தியேக கவனம்

ஒவ்வொரு



தையல் மிஷின்

தயாரிப்பதிலும் காண்பிக்கப்படுகிறது




## அதனுல் அது நன்ருகவும் நீடித்தும் உழைக்கிறது·

உஷா அதிக வலுவுடனும், சரளமாகவும் வேலை செய்வதன் இரகசியம் அதுவே...ஒவ்வொரு மிஷினும் 30% பிரத்தியேக சக்தியைப் பெற்றுள்ளது.

உயர்ந்த தரமான பொருட்களினுல் உலகின் மிகப்பெரிய எல்லா சாதனங்களையும் ஒருங்கே பெற்ற தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. குறையின்றி செயல்பட ஒவ்வொரு உஷா தையல் மிஷினும் 2000 தடவைக்கு மேல் பரிசோதிக்கப்படுகிறது. ஆகவே நீங்கள் உஷா வாங்குவதன் மூலம் ஆயுட்காலத்திற்கான முதலீடு செய்கிறீர்கள்! உஷாவின் ஏராளமான மாடல்களில் ஒன்றைத் தேர்ந்தெடுங்கள். ஒவ்வொன்றும் கரங்களாலும், கால்களாலும், மின்சக்தியாலும் இயங்கக்கூடியது

சிறந்ததை வாங்குங்கள்  எல்லாவற்றிலும் சிறந்தது



UMG-74-71 TAM

டில்லி; டிசம்பர் மாதம்; அதிகாலை மூன்று மணி — குளிர் உச்ச கட்டத்தில்தானே இருக்கும்?

கம்பளியை இழுத்துப் போர்த்திக்கொண்டு தலைநகரமே உறங்கிக் கொண்டிருக்கிறது! ஆனாலும் டில்லி விமான நிலையத்தில் அந்த நேரத்தில், பலர், கடுமையான குளிரையும் பொருட்படுத்தாமல் கண் விழித்துக் கொண்டிருந்தனர். பிரகாசமான விளக்குகள் ஒளிவிட்டுக் கொண்டிருந்தன. இந்தியன் ஏர்லைன்ஸ் ஊழியர்கள் வானத்தைச் சற்றைக்கொருதரம் பார்த்தனர்!

அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த விமானம், வான வீதியில் ஒளி சிந்தித் தோற்றம் அளித்தது. வர வர அதன் உருவம் பெரிதாகக் கீழிறங்கி வந்தது.

அந்த விமானம், இந்தியன் ஏர்லைன்ஸ் வாங்கிய ஏழு 'போயிங் — 737' விமானங்களில் ஒன்றாகும். மிக நவீன சாதனங்களுடையதும், 119 பிரயாணிகள் பயணம் செய்யக் கூடியதுமான போயிங் — 737 விமானங்களை உலகில் பதினெட்டு நாடுகளைச் சேர்ந்த இருபத்தொன்பது விமான நிறுவனங்கள், 250க்கு மேல் வாங்கியுள்ளன.



# வானத்தில் வீதி காண்பவர்



இன்று அவ்விமானங்களில் ஒன்று அமெரிக்காவில் போயிங் விமானங்களைத் தயாரிக்கும் சியாட்டில் நகரில் பறக்கத் தொடங்கி, இந்தியாவின் தலைநகரில் வந்து இறங்கிக் கொண்டிருக்கிறது! இவ் விமானத்துக்கு இதுவே முதல் பயணம்.

தரையைத் தொட்ட அந்த விமானத்திலிருந்து, ஆறடி உயரமுள்ள மனிதர், மாநிற மேனியுடன் கூடியவர், பயணக் களைப்புச் சிறிதுமின்றிப் புன்சிரிப்புடன் கீழே இறங்கினார். நண்பர்களும் அதிகாரிகளும் கைகுலுக்கி அவரை வரவேற்றார்கள்!

சியாட்டிலிருந்து அதை ஓட்டி வந்த அந்த விமானி கேப்டன் பி. எஸ். ராஜன்.

அவர் பெயரில் மூன்றெழுத்துக்கள்.

அவர் ஓட்டி வந்தது மூன்றாவது போயிங். ஆர்டர் செய்ததில் முதலாவது பயிற்சிக்காக சியாட்டில் நகரிலேயே இருப்பது. இரண்டாவது 'கருடன்' 1970 டிசம்பர் பத்தாந் தேதி வந்து விட்டது. இருபத்தாறாம் தேதியன்று வந்த இந்த மூன்றாவது விமானத்தின் பெயர், மூன்றெழுத்துப் பறவையான 'ஜடாயு'. வந்து இறங்கிய நேரம் — அதிகாலை மூன்று மணி!

கேப்டன் பி. எஸ். ராஜன் கடந்த முப்பதாண்டுகளாக வான வீதிகளில் பறந்து வருகிறார். சமீபத்தில் பதவி உயர்வு கிடைத்திருக்கிறது. இந்தியன் ஏர்லைன்ஸில் டெபுடி ஆபரேஷன் மானேஜராக்கப் பட்டிருக்கிறார்.

கேரள மாநிலத்தைச் சேர்ந்த இவர் பள்ளி இறுதியாண்டுத் தேர்வுக்குப் பிறகு, இந்திய விமானப் படையில் சேர்ந்தார். அங்கு சில வருடங்கள் பணி புரிந்து விட்டு, வங்காள விமான மோட்டும் கிளப்பில் அங்கத்தினராகி, விமானத்தில் பைலட்டாகப் பணி புரிய விரும்பிப் பயிற்சி பெற்றார். பல ஆண்டுகள் பயிற்சிக்காகச் செலவிட வேண்டியிருந்தது.

1947ல் துணை விமானியாகி விட்டார். மூன்றாண்டுகளுக்குப் பிறகு, 1950-ல் கேப்டன் ஆனார்.

இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன் அமைவதற்கு முன்

பாகத் தனியார் நடத்தி வந்த சில விமான நிறுவனங்கள் நம் நாட்டில் இயங்கி வந்தன அல்லவா? அவற்றில் ஒன்று 'ஜூபிடர் ஏர் வேஸ்'. டாக்டர் அழகப்ப செட்டியாருக்குச் சொந்தமாக இருந்த இந்த நிறுவனத்திலும், பின்னர், 'ஏர்வேஸ் இந்தியா'விலும் பணியாற்றிய பிறகு, இந்தியன் ஏர்லைன்ஸ் விமானியானார்.

டகோடா, வைகவுண்ட், ஆவ்ரோ, காரவல், போயிங் ஆகிய விமானங்களை ஓட்டியவர்.

இந்தியா, இலங்கை, தூரக் கிழக்கு ஆசிய நாடுகள்வரை இவர் பயணிகளுடன் விமானங்களைச் செலுத்திப் போய் வந்திருக்கிறார்.

ஜவாஹர்லால் நேருவுக்குப் பல முறை விமானியாகப் பணி புரிந்தவர் ராஜன். ஜூபிடர் ஏர்வேஸ் விமானியாக இருந்தபோதே நேருவிடம் பரிச்சயம் ஏற்பட்டதாம். அப்போது அவர் பிரதம மந்திரி அல்ல.



ஆட்லி, சூயென் லாய், ஹதாண்ட், தலாய் லாமா ஆகியோர் இந்தியாவுக்கு வருகை தந்த போது, விசேஷ விமானங்கள் ஏற்பாடு செய்யப்பட்டன. அந்த விசேஷ விமானங்களின் விமானியாகும் வாய்ப்பு ராஜனுக்குக் கிட்டியது.

திரு ஹதாண்டைக் கொழும்புக்கு அழைத்துச் சென்று இந்தியா திரும்புகையில், ஹதாண்டே விமானிகளுடன் புகைப்படம் எடுத்துக் கொள்ள விரும்பினார். அந்த அளவுக்கு அவர் மனத்தைக் கவர்ந்துவிட்டார்கள், அவருடன் சென்றவர்கள்.

நேபாள மன்னர் திரிபுவனிடம் அவரது தனிப்பட்ட விமானத்தை ஓட்டும் விமானியாகவும் சில மாதங்கள் இருந்திருக்கிறார் ராஜன்.

பிரதமர் நேரு, ஒரு முறை அவசரமாகக் காஷ்மீர் செல்ல விரும்பினார். அவரது விமானத்தை ராஜன் செலுத்தினார். ஜம்முவில் இரண்டு மணி நேரம் நேரு தங்க விரும்பினாராம். அப்போது நேரு, விமானி ராஜனையும் மற்றவர்களையும் — அன்றைய மதிய உணவுக்குத் தம் அருகிலேயே அமர வைத்துக் கொண்டார். இந்த நிகழ்ச்சி ராஜனின் மனத்தைத் தொட்டது; நினைவில் பசுமையாக இருக்கிறது.

''இன்று உங்கள் வேலை நாட்கள் எப்படி வகுக்கப்பட்டிருக்கின்றன ?'' எனக் கேட்டேன்.

''விமானிகளுக்கு வாரம் ஐம்பது மணி நேரம். இந்த வேலை நேரத்துக்குப் பிறகு வேலை செய்யும் நேரம் 'ஓவர் டைம்' ஆகும்'' என்றார்.

''இடைவிடாமல் தொடர்ந்து விமானம் ஓட்டும்படியான நிலைமை எப்போதேனும் ஏற்பட்டிருக்கிறதா?''

''நம் மீது சீனப் படையெடுப்பு ஏற்பட்டதல்லவா? அப்போது இந்தியன் ஏர்லைன்ஸ் விமானங்கள் துருப்புக்களை ஏற்றிச் செல்ல வேண்டும் என உத்தரவு வந்தது. அவசர நிலைமையை முன்னிட்டு, எங்களுக்குத் தொடர்ந்து வேலை செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இந்தியத் துருப்புக்களை ஆதம்பூர் — தேஜ்பூர் — டில்லி — இப்படிப் பல இடங்களில் குவித்துக் கொண்டிருந்தோம். நான் ஐம்பத்தாறு மணி நேரம் இடைவிடாமல் விமானம் செலுத்தினேன். அதாவது இரண்டு நாள், எட்டு மணி நேரம். சாப்பிடும் போதும், பெட்ரோல் நிரப்பும் போதும் சற்று ஓய்வு கிடைக்கும். நாட்டுப் பற்றே எங்களைச் சோர்வடையாமல் இருக்கச் செய்து ஓர் ஆவேசத்தையும், சக்தியையும் கொடுத்தது.....''

☐ கேப்டன் பி. எஸ். ராஜன்.

☐ இந்தியன் ஏர் லைன்ஸ் 737 போயிங் விமானத்தின் ஒரு தோற்றம்.

☐ இலங்கையில் விமான விபத்து.

இன்றைய ஜெட் யுகத்தில், விமானங்களின் வேகம் வியப்புக்குரியதாகும். போயிங் 737 விமானம், மணிக்கு 885 கிலோ மீட்டர் பறக்கிறது. சமுத்திர மட்டத்திலிருந்து ஒன்பதாயிரம் மீட்டர் உயரத்தில், மேக மண்டலங்களுக்கு மேல் பறக்கிறது.

விமானியின் வாழ்க்கை ஆபத்தானதுதான்; எதிர்பாராத அபாயம் எந்த நேரமும் குறுக்கிடக் கூடும். பருவ நிலை சரியில்லாமல் போகலாம். மூடுபனியாலும் தொல்லை நேரலாம். நவீன விமானங்களில் இவற்றையெல்லாம் சமாளிக்கும் விதத்தில்தான் யந்திரங்களும், எஞ்சின்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. என்றாலும்கூடச் சில சமயம், விபத்துக்கள் நேரக்கூடும்.

''கேப்டன் ராஜன்! நீங்கள் விமானம் ஓட்டி வந்த போது, எப்போதேனும் ஒரு முறை அபாய நிலையைச் சந்தித்தது உண்டா?'' என்று வினவினேன்.

''ஒரு முறை இலங்கையில் நான் செலுத்திய விமானம், 'ரன்வேயில்' ஓடும் போது,












விபத்துக்குள்ளாயிற்று. தெய்வாதீனமாக ஒரு பயணிக்கும் உயிராபத்து ஏற்படவில்லை. இது 1960ல் நிகழ்ந்தது. விமானம் உடைந்து விட்டது!'' என்றார்.

ராக்கெட்டில் விண்வெளியைக் கடந்து, சந்திர மண்டலத்துக்குள் பிரவேசிக்குமுன்பு, விண்வெளி வீரர்கள் கடவுளிடம் பிரார்த்தனை செய்தார்கள். அப்படியிருக்க, இந்த விமானிகள் தெய்வ நம்பிக்கையில்லாமல் இருப்பார்களா என்ன?

விமானி ராஜன், விமானத்தில் ஏறி உட்கார்ந்து விமானத்தைச் செலுத்துமுன் குருவாயூர் அப்பனையும், சபரிமலை சாஸ்தாவையும் மானசிகமாக வணங்குவதுண்டாம். ஆண்டுக்கொரு முறை விடுமுறையில் பழநி, குருவாயூர் சபரிமலை ஆகிய இடங்களுக்குக் குடும்பத்தோடு சென்று வருவாராம்.

ஒருமுறை கல்கத்தாவுக்கு இரவில் விமானம் ஓட்டிச் சென்றபோது, இரண்டு வெளி நாட்டுக்காரர்கள் நன்றாய் மதுபானம் செய்திருந்ததால் நண்பர்களாகப் பேசிக்கொண்டிருந்தவர்கள் பேச்சு முற்றித் திடீரென்று அடிதடியில் இறங்கி விட்டார்கள்!... மற்றப் பிரயாணிகள் நடுங்கினார்கள். விமானத்தைச் செலுத்திய ராஜன் துணை பைலட்டிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டு வந்து சண்டை போட்டவர்களை விலக்கிச் சமாதானப்படுத்தினார். ''ரொம்பக் கஷ்டப்பட்டுப் போனேன்; போதும் போது மென்றாகி விட்டது'' என்றார்.

உலகின் பல பாகங்களுக்கும் போய் வந்திருக்கும் இந்த விமானி, தாம் பார்த்த விமான நிலையங்களுள் மிகத் துப்புரவாக இருப்பது 'ஆம்ஸ்டர்டாம்' என்றார். பரப்பு மிக்கது அமெரிக்காவில் உள்ள கென்னடி விமான நிலையம்.

ஆறு மாதங்களுக்கு ஒரு முறை உடற் பரிசோதனையும் கண் பார்வைப் பரிசோதனையும் ஒவ்வொரு விமானிக்கும் கட்டாயமாம். தவிர, ஓட்டும் பயிற்சியைக் கூட அவ்வப்போது நிபுணர்களின் மேற்பார்வையில் பெற வேண்டுமாம். இச்சமயங்களில் விமானம் ஓட்டுவதில் புதிய நுணுக்கங்களை அறிந்து கொள்கிறார்கள்; இவர்களின் திறமை, சமயோசித புத்தி முதலியன பரிசோதிக்கப் படுகின்றன.

''விமானிகளுக்கு ஆயிரக் கணக்கில் சம்பளம் தந்தும் 'போதவில்லை!' என்று நாங்கள் குறைப்படுவதாய்ப் பொதுமக்கள் கூறுகிறார்கள். உண்மையில் எங்களுக்கு மட்டும்தான் வைத்திய வசதி உண்டு. எங்கள் குடும்பத்தாருக்குக் கிடையாது. வருமான வரி கட்டியது போகப் பாக்கி யுள்ளது எங்கள் தகுதிக்கேற்ப வாழ்க்கை நடத்தப் போதுமானதாக இல்லை'' என்றார் கேப்டன் ராஜன்.

இன்றைய நிலையில் ஒருவர் விமானியாக விரும்பினால், போதுமான கல்வி அறிவு பெறுவதுடன், ஐம்பதாயிரம் ரூபாய் வரை பணமும் செலவழித்தால்தான் முடியும் என அவர் மூலம் அறிகிறோம்.

பேட்டி : ஏ. சுவாமிநாதன்

# வின்ஸெண்டின் இலவசப் பரிசுத் திட்டம்

## ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு காகம்,
## அந்த காகத்திற்கு அதிக தாகம்......

அது பழங்கதை.

நமது நவநாகரீக காகம்
பானையில் கூழாங்கற்களைப்
போட்டா தண்ணீரை எட்டிக்
குடிக்கும்? பாருங்கள்!
அது உறிஞ்சு குழாய் மூலம்
புட்டியிலிருந்து குளிர்பானம்
அருந்தும் சொகுசை!
என்ன பானம் தெரியுமா?

# "த்ரில்"




புகழ்பெற்ற **வின்ஸெண்ட்.** ஸ்தாபனத்தார்
தங்களது **மணிவிழா** (1912—1971-72) ஆண்டின்
போது உங்கள் அனைவருக்கும் மகிழ்வுடன் சமர்ப்பிப்பது:

1. முற்றிலும் புதிய முறையில் தயாரிக்கப்பட்ட, தன்னிகரற்ற மும்மணிகளான ருசிமிக்க, புத்துணர்ச்சியளிக்கும், இனிய பானங்கள்

   **"த்ரில்", "லிம்பு", "ஓ-ஸோ-க்ரேப்"**

2. ஒவ்வொருவருக்கும் ஒரு இலவச போனஸ் பரிசு!—நமது நவ நாகரீக காகத்தை "த்ரில்" பானம் அருந்தும் நிலையில் ப்ளாஸ்டிக்கில் மிக நேர்த்தியாக வடிக்கப்பட்ட அழகு கொஞ்சும் வண்ணப் பொம்மை. உங்கள் குழந்தைகளுக்காகவே செய்யப்பட்டது. இது எந்த விதத்திலும் உங்களுக்கு இலவசமாக கிடைக்கக்கூடியது, லாட்டரி அல்ல, குலுக்கலும் கிடையாது. போட்டி திட்டம் ஒன்றும் இல்லை. நீங்கள் ஒவ்வொருவரும் அடையலாம்,

**15-8-1971** முதல் **28-10-1971** வரை நீங்கள் அருந்தும் ஒவ்வொரு வின்ஸெண்ட் இனிய பானத்திற்கும் (சோடா தவிர) அதற்காகத் தரப்படும் கூபனை விற்பனையாளரிடமிருந்து கேட்டு வாங்கி, சேகரித்து மேற்சொன்ன பரிசு திட்டத் தேதி முடிந்த பிறகு 50 கூபன்களுக்கு ஒரு பொம்மையாக பெற்றுக்கொள்ளவும்.

இன்றே கூபன்கள் சேகரிக்க ஆரம்பியுங்கள். வின்ஸெண்ட் ஸ்தாபனத்தாரின் மணிவிழா ஆண்டு ஆரம்பமாகிறது.

வின்ஸெண்டின் இதர தரமான பானங்கள்:

**கோல்டன் கிரஷ், ஆரஞ்சு, லெமன், ஜீரா மசாலா, ஜிஞ்சர், வின்ஸெண்ட் ஸ்பெஷல் (கோலா) மற்றும் பல**



கருணாநிதே போற்றி
திருவாரூரில் பிறந்தவா போற்றி
முதல்வா போற்றி
மலர்க் கிரீடம் தரித்தவா போற்றி!!



ஏ.ஸி. பென்ஸ் கார்
போற்றி
ஏழை பங்களா போற்றி
அடுக்குமொழி வள்ளலே
போற்றி
இடக்கு பதில் தருவோய்
போற்றி
வள்ளுவரை வாழ்த்து
வாய் போற்றி
கள்ளுக்கடை கொண்டு வருவாய் போற்றி
கட்டாயத் தமிழ் போதனு மொழி போற்றி
தப்பாமல் தேர்தலுக்காக வாபஸ் பெற்ருய்
போற்றி!

அண்ணுவழி நிற்பதாய்ச் சொன்னுய் போற்றி
அறுபத்தஞ்சு மாடிக் கட்டிடம் போற்றி
பிறந்த நாள் விழாவே போற்றி
பெரிய பெரிய போஸ்டர்களே போற்றி

மந்திரி பதவி நீக்கல் செய்தாய் போற்றி
தந்திரமாய் சபாநாயகர் ஆக்கினுய் போற்றி
பெற்ருய் டாக்டர் பட்டம் போற்றி
போலீஸ் தடியடிக்குக் காரணமானுய் போற்றி

பாண்டிச்சேரி-1
4–8–71 ஆர். வாசுதேவன்

○ அடிப்படை உரிமைகள், சொத்துரிமை, பேச்சுரிமை போன்ற உரிமைகள் எனக்கு இருக்கின்றன என்று சொல்லிக் கொண்டு நீதிமன்றத்துக்குப் போகும் உரிமை ஆகிய எல்லா உரிமைகளையும் குழி தோண்டிப் புதைத்து விட்டு, பிரதம மந்திரியும், மற்றும் சில மந்திரிகளும் ஜனநாயகத்துக்கு ஆபத்தில்லை; சிறுபான்மையினருக்கு ஆபத்தில்லை பேச்சுரிமை, சொத்துரிமைகளுக்கு ஆபத்தில்லை; பார்லிமெண்ட் அதன் அதிகாரத்தைத் தவருன வழியில் பயன்படுத்தாது என்றெல்லாம் மிக அழகாகப் பேசியிருக்கிருர்கள். பார்லிமெண்ட் தன் அதிகாரத்தை அத்துமீறி உபயோகித்துள்ளது என்பதற்குத் தற்போது நிறைவேற்றப்பட்ட மசோதாவே சான்ருகும். அரசியல் சட்டத்தில் உறுதியளிக்கப்பட்டுள்ள உரிமைகளே காற்றில் பறக்க விடப்பட்டன. இவர்கள் வாய்மொழி மூலம் கொடுக்கும் உறுதிமொழிதாஞ நிலைத்து நிற்கப்போகிறது? இவை எல்லாவற்றையும் விட வேடிக்கை என்னவென்ருல், இவர்கள் பேசுவதை யெல்லாம் மக்கள் நம்பவேண்டும் என்று நினைக்கிருர்களே, அதுதான். அப்படி






○ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

யாராவது நம்புவார்கள் என்ருல் அவர்களை விட ஏமாந்தவர்கள் வேறு யாரும் இருக்க முடியாது.
ஈரோடு,
6–8–71 எஸ். எம். எஸ்.

ஹரிஜனங்களின் முன்னேற்றத்தைக் கருதியே கடந்த இருபது ஆண்டுகால காங்கிரஸ் ஆட்சி மதுவிலக்குச் சட்டத்தை இரத்தாக்க முயலவில்லை. ஆனல் இருபது கோடி ரூபாய் நஷ்டத்தைக் காரணமாகக் கொண்டு மதுவிலக்குச் சட்டத்தை இரத்தாக்கத் தற்போதைய அரசு முயல்வது ஹரிஜன மக்களுக்கு எவ்விதத்திலும் நன்மை பயக்காது. மேலும் மதுவிலக்குச் சட்டத்தை எடுத்துவிடுவதன் மூலம் எதிர்பார்க்கும் நன்மையை விட எதிர்பாராத தீமைகளே உருவாகும்.



தமிழ்நாட்டில் மதுவிலக்குச் சட்டம் அமுலாக்கப்படுவதன் மூலம் குறிப்பாகத் தாழ்த்தப்பட்ட மக்கள் முன்னேற்றமடைவதற்கு வழிதோன்றியது. கடந்த காலங்களில் கிராமங்களில் வசிக்கும் மக்களின் இல்லங்களில் தண்ணீர் குடிக்கக் குவளைதானும் இல்லாத நிலையிருந்து வந்தது. மதுவுக்கு அடிமையாவதினல் மக்கள் கல்வியிலும் பொருளாதாரத்திலும் பின்தங்கித் தலைமுறை தலைமுறையாகப் பஞ்சைகளாக, பராரிகளாக அடிமைகளாக வாழ வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உந்தப்பட்டிருந்தனர். குறிப்பாக, எம் அருந்ததிய சமூக மக்கள் மிகவும் கீழ்த்தரமான முறையில் மதிக்கப்பட்டு வந்துள்ளனர். ஆனல் இன்று அரசினர் உதவியோடும் கழகத்தின் சமுதாயப் பணியோடும் ஹரிஜன மக்கள் பல்வேறு துறைகளில் முன்னேற்ற மடைந்து வருகின்றனரென்பதற்கு முக்கிய காரணம் மதுவிலக்குச் சட்டம் அமுலிலிருந்தமையாகும்.

இந்நிலையில் திராவிட முன்னேற்றக் கழக அரசு மதுவிலக்குச் சட்டத்தை இரத்தாக்கச் சட்டம் தீட்டுவது மக்களுக்குச் செய்யும் மாபெரும் துரோகமாகும்.

கொழும்பு-10 க. பி. பூபாலர்
31–7–71 அகில இலங்கை அருந்ததியார்
(ஹரிஜன்) சங்கம்



# தலைவலியா?

# அனாஸின்

## விரைவிலே குணம் பெற மேலானது.

## ஏனெனில் அது சக்தி வாய்ந்தது; நம்பகமானது.



“அனாஸின் தலைவலியை விரைவிலே அகற்றுகிறது” என்று அடித்துக் கூறுகிறார், பம்பாய் ஆபீசர் திரு. எஸ். என். எஸ். ராவ். “என்னுடைய கைப் பெட்டியில் எப்போதும் ஒரு ஸ்ட்ரிப் அனாஸின் இருக்கும்”

**சக்தி வாய்ந்தது**—ஏனெனில், உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது**—ஏனெனில், டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல் பல மருந்துகளின் கலவையே அனாஸின். அதை குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்—எல்லா மருந்துகளுக்கும் கேட்பது போல உங்கள் குழந்தைக்கான இதன் சரியான அளவையும் டாக்டரிடம் கேளுங்கள்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள்
மற்றும் நோவுகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி,
பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி

# அனாஸின்

இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி



Regd User of TM: Geoffrey Manners & Co., Ltd.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor. T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

